உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 33 -] பிரமாதீச ஆண்டு மார்கழித்திங்கள் 10—1—74 [ இதழ் 2

உலகத்தில் அமைதிநிலை பெற வேண்டி,



திருபுவனத்தில் எழுந்தருளி அருள் வழங்கும்,
அமைதி காக்கும் ஸ்ரீ சரபர் திருவுருவம்
இவ்விதழ் அட்டையை அணிசெய்கிறது.





தருமையாதீனக்குருமுதல்வர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

ஐந்தறிவாற் கண்டாலும்
ஆர்ஏது சொன்னாலும்
எந்த விருப்புவெறுப்
பேய்ந்தாலுஞ் — சிந்தையே
பார விசாரத்தைப்
பண்ணாதே ஏதொன்றும்
தீர விசாரித்துச்
செய்.

— சிவபோகசாரம் 131.

ஆசிரியர் :

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# “ஞானசம்பந்தம்”

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 33 || 10-1-74 || இதழ் 2

## உட்பொருள்

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 33 | பிரமாதீச – மார்கழி – 10—1—74 | இதழ் 2

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே – சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## ஆடும் பெருமான் அபிடேக நாட்கள்

சிவவழிபாடு, இம்மை மறுமை நலங்களுடன், உண்மை ஞானத்தின்வழி வீடு பேற்றையும் தருவதாகும். சிவ வழிபாட்டில் 'திருமஞ்சனம்' எனப்படும் அபிடேகம் முதன்மையானது. இதனல் 'பூஜை' என்ருல் 'அபிடேகம்' என்றே சிலர் நினைத்துக்கொள்கிருர்கள்.

சிவபெருமானை, 'அபிடேகப் பிரியர்' என்பார்கள். அதற்கேற்கச் சிவாலயங்களில் அபிடேகம் நிகழ்வதுபோல மற்றைய ஆலயங்களில் நிகழ்வதில்லை. "ஆடினய் நறு நெய்யொடு பால் தயிர்" "பாலுநெய் முதலாமிக்க பசுவில் ஐந்தாடுவானே" "நெய்யினெடு பாலிளநீர் ஆடினன்காண்" "ஆனைந்தும் ஆடினன்காண்", "நெய்யும் பாலும் தயிருங்கொண்டு நித்தல் பூசனை செய்யலுற்ருல்," என்ருற்போல, சிவபெருமான் அபிடேகப் பிரியனுதலைத் திருமுறைகளும் பற்பல இடங்களில் இனிது எடுத்து ஓதுகின்றன.

சிவபெருமானுக்கு ஒவ்வொரு மாதப் பௌர்ணிமையிலும் சிறப்பாகச் செய்யத்தக்க அபிடேகங்கள் இவை என்பதை ஆகமங்கள் நன்கு விதிக்கின்றன. அவ்விதியின்படி சிவாலயங்களில் அவ்வபிடேகங்கள் நடத்தப்பெற்றும் வருகின்றன. அவற்றுள் ஐப்பசியில் பௌர்ணிமை அல்லது அசுவதி நட்சத்திரத்தில் அன்னபிடேகம் நடைபெறுகின்ற ஒன்று அனைவராலும் அறியப் பட்டது. ஆயினும் மற்றைய மாதங்களிலும் அதுபோலச் சிறப்பு அபிடேகங்கள் உள்ளன.

சிவாகமங்களில் சிவபெருமானுக்கு அபிடேகமாதற்குரிய பொருள்கள் இவை என்றும், அவைகளை இவ்விவ்வாறு அமைத்து இன்ன முறையால் அபிடேகித்தல் வேண்டும் என்றும், இன்ன இன்ன பொருள்களை அபிடேகித்தால் இன்ன இன்ன பலன்கள் விளையும் என்றும் கூறப்படுகின்றன. சிவ வழிபாட்டில் அபிடேகம் செய்ய இயலாத நிலை இருக்குமாயின், அப்பொழுதும் பாவனையால் அபிடேகம் செய்யப்பெறுகின்றது. எனவே, "எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும் - உண்மையாவது பூசனை" எனக் கூறியதில் அபிடேகத்தையே பெருமான் சிறப்பாக விரும்புகின்றான் என்பது தெளிவாம். ஆகவே, அபிடேகம் இல்லாத பூசை பூசையல்லவாம்.

அபிடேகம் இத்துணைச்சிறப்புடையது ஆதலின், அது நாள் வழிபாட்டிலும் ஓரளவேனும் இன்றியமையாது செய்யத்தக்க தாகின்றது. ஆயினும், கூத்தப்பெருமானுக்கு அபிடேகம் நாள் தோறும் செய்யப்படாமல், ஓர் ஆண்டில் ஆறே நாட்களில் செய்யப் படுதலை யாவரும் அறிவர். ஆனால், அதன் உண்மை என்ன என்பதைப் பெரும்பாலோர் அறிய முற்படுதல் இல்லை.

"அவனன்றி ஓர் அணுவும் அசையாது" என்றபடி உலகம் இறைவன் இயக்கினால் அன்றி இயங்காது என்னும் உண்மையை உலகிற்கு உணர்த்தி நிற்பது கூத்தப்பெருமானது திருவடிவமே. சிவமூர்த்தங்களில் ஏனைய மூர்த்தங்கள் பலவும் அசையாது இருக்கும் மூர்த்தங்களாக, நடராஜ மூர்த்தம் ஒன்றே ஓர் இமைப் பொழுதும் நில்லாமல் அசைந்துகொண்டே – ஆடிக்கொண்டே இருக்கும் மூர்த்தமாகும். அம்மூர்த்தி ஓர் இமைப்பொழுது நின்றால், அகில உலகங்களும் அனந்தகோடி காலம் அசைவின்றி நின்றுவிடும். அதனால் அவன் அரை நொடியும் நில்லாது ஆடிக் கொண்டே இருக்கின்றான். அதுபற்றி அந்த நடனம் 'அனவரத தாண்டவம்' எனப்படுகின்றது. அனைத்தையும் அழித்து உயிர் களுக்கு ஓய்வு அளிக்கின்ற சருவசங்கார காலத்திலும் கூட

அவன் தனது ஆட்டத்தை நிறுத்துவதில்லை. நிறுத்தினுல், உலகம் மீளத் தோன்ருது. ஆகவே, ' இறைவன் உலகத்திற்கு அந்தரியாமி - சர்வாந்தரியாமி ' என்று சொல்லப்படுவது எல்லா மூர்த்திகட்கும் பொதுவாக உரியதேயாயினும், நடராஜமூர்த்திக்கே சிறப்பாக உரியதாகின்றது. ஆகவே, மற்றைய மூர்த்திகட்கெல்லாம் மக்கட்கு உரிய கால முறையிலே வழிபாடு செய்யப்படினும், உலகத்தை இயக்கி நிற்கும் ஒரு பெரு மூர்த்தியாகிய நடராஜப் பெருமானுக்குத் தேவர்கட்குரிய கால முறையிலே வழிபாடு செய்யப்பெறுகின்றது.

மக்கட்கு உரிய காலத்தில் ஓர் ஆண்டாக அமைவது; தேவர்கட்கு ஒரு நாளாக அமைகின்றது. மக்கட்கு உரிய உத்தராயண தட்சிணுயன காலங்களே தேவர்கட்குப் பகலும், இரவுமாகிய காலங்களாகும்.

திருக்கோயில்களில் நிறைவாகச் சொல்லப்படும் வழிபாடு ஆறுகால பூஜையாகும். ' ஆறு ' என்னும் எண்ணிக்கை பெரும் பொழுதும், சிறுபொழுதும் ஆறு ஆருகப் பிரிக்கப்பட்டிருப்பதைப் பற்றியதே. பெரும்பொழுதாவது ஆண்டின் கூறு. சிறு பொழுதாவது நாளின் கூறு. எனவே, ஆலயங்களில் ஒருநாளில் ஆறு காலத்திலும் பூஜை நடைபெறுவது நிறைவான நித்திய பூஜையாகச் சொல்லப்படுவதால், தேவர் நாளாகிய ஓராண்டுக் காலத்தில் கூத்தப் பெருமானுக்கு ஆறுமுறை வழிபாடு செய்யப் பெறுகின்றது

நாள்தோறும் பூஜை நடைபெறுகின்ற ஆறுகாலங்களாவன; ' உஷக்காலம், காலசந்தி, உச்சிகாலம், சாயங்காலம், இரண்டாங்காலம், அர்த்தயாமம் ' என்பன. இவற்றுள் முன்னைய மூன்றும் பகற் காலமும், பின்னைய மூன்றும் இராக் காலமுமாக விளங்குதல் தெளிவு. அவற்றுள் உஷக்காலம் பகற் பகுதிபோலவும், சாயங் காலம் (மாலை) இரவுப் பகுதிபோலவும் முன்னதன் கழிவும், பின்னதன் தோற்றமும் பற்றிக்கொள்ளப்படுதல் அறியத்தக்கது.

இவ்வாறே நடராஜப் பெருமானது ஆறு அபிடேக காலங் களும், மார்கழி, மாசி, சித்திரை, ஆனி, ஆவணி, புரட்டாசி என்னும் மாதங்களாக அமைகின்றன. இதிலும் மார்கழி உத்தராயணம் போலவும், ஆனி தட்சிணுயனம் போலவும் கொள்ளப்படுதல் காணலாம். இம்முறையில் கூத்தப்பெருமானுக்கு மார்கழி உஷக் காலமும், மாசி கால சந்தியும், சித்திரை உச்சி காலமும், ஆனி சாயங் காலமும், ஆவணி இரண்டாங் காலமும், புரட்டாசி அர்த்த யாமமும் ஆவனவாம். இரண்டாங் காலமும், அர்த்தயாமமும் அணுக்கமாய்

இருத்தல்போல அடுத்தடுத்துள்ள ஆவணி, புரட்டாசி மாதங்கள் அவ்வக் காலமாக அமைகின்றன. ஆறுகால பூஜையில் உஷக் காலமும், சாயங்காலமும் சிறப்பாதல்போல, கூத்தப் பெருமானுக்கு மார்கழியும், ஆனியும் சிறப்புடையனவாக விளங்குகின்றன மார்கழி முதலிய மாதங்களில் கூத்தப் பெருமானுக்குச் செய்விக்கின்ற அபிடேகத்தை அன்றைய நாளில் அந்த வேளையில் செய்தலே முறை ஆயினும், சில மாதங்களில் பிற வேளைகளிலும் நடைமுறையில் நிகழ்வதைப் பார்க்கின்றோம்.

மார்கழி முதலிய மாதங்களில் கூத்தப்பெருமானுக்கு உரிய அபிடேக நாட்கள் ஒரு மூன்று திங்களில் வேறு வேறு நட்சத்திரத்திலும், மற்றைய மூன்று திங்களில் 'சதுர்த்தசி' என்னும் ஒரே திதியிலுமாகக் கொள்ளப்படுகின்றன. இதனை,

" சித்திரையில் ஓணம்முதல்; சீர் ஆனி உத்தரமாம்;
சத்ததனு ஆதிரையும் சார்வாகும் - பத்திவளர்
மாசிஅரி கன்னி மருவு சதுர்த்தசி மன்
றீசர் அபி டேகதின மாம்."

என்னும் தனிவெண்பா விளக்குகின்றது.

சித்திரை - திருவோணம். ஆனி - உத்தரம். மார்கழி - திருவாதிரை. மற்றைய மூன்று திங்களுக்கும் உரியது சதுர்த்தசியே. இவைகளில் மார்கழித் திருவாதிரை மிகச் சிறப்புடையதாய் இருத்தலால் சிலர் மாதந்தோறும் வரும் திருவாதிரைகளிலும் நடராஜப் பெருமானுக்கு அபிடேகம் செய்விக்கின்றார்கள் பக்தி மிகுதியால் அவர்கள் அவ்வாறு செய்விப்பினும், கூத்தப் பெருமானுக்கு ஓர் ஆண்டில் ஆறு அபிடேகத்திற்குமேல் அபிடேகம் செய்விக்க எங்கும் விதியிருப்பதாகத் தெரியவில்லை.

கூத்தப்பெருமானது ஆறு அபிடேகங்களுள் மிகச் சிறந்ததாகிய மார்கழித் திருவாதிரை உஷக்கால அபிடேகத்தைச் செய்வித்தும் தரிசித்தும் மனமகிழ்வுற்ற அன்பர்கள், மாசி முதலாக வர இருக்கின்ற மற்றைய அபிடேகங்களையும் அவ்வாறே அவற்றின் உண்மையையும், பெருமையையும் உணர்ந்து செய்வித்தும் தரிசித்தும் ஆடும் பெருமான் அருட்பெருக்கிற்கு உரியவராய் அனைத்து நலங்களும் எய்துவார்களாக.



உ
குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**
சீகாழியில் நடைபெற்ற
சென்னை சைவசித்தாந்த மகாசமாஜத்தின்
68 ஆவது ஆண்டு விழாவைத் தொடங்கிவைத்து
வழங்கியருளிய

# ஆசியுரை

29—12—73

திருச்சிற்றம்பலம்

தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானைத் தத்துவனைக்
கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையும் காவலனை
முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்தும் இவைவல்லார்
பொன்னடைந்தார் போகங்கள் பல அடைந்தார் புண்ணியரே.

திருச்சிற்றம்பலம்

## பிறப்பின் பயனைப்பெற முயல்வோம் :

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி, மற்றும் எண்ணிறந்த தாவர சங்கமங்களாய்ப் பிறந்தும் இறந்தும் இளைக்கின்ற உயிர்கள் அப்பிறப்புக்களை விட்டு மக்கட்பிறவியை அடைதல், கடலைக் கையால் நீந்திக் கரைசேர்ந்த செயல் போல அரியதினும் அரியது. அத்தகைய மக்கட் பிறப்பிலும் இறைவனை நேரே கண்ட அருளாளர்களும் அவர்களது அருள்மொழிகளும் நிரம்பத் தோன்றி நிலவும் செந்தமிழ் நாட்டில், பரசமயங்களிற் செல்லாத பாக்கியத்தைப் பண்ணிச் சைவர்களாகப் பிறப்பதற்கு நாம் முன்னைப் பிறப்புக்களிற் செய்த புண்ணியம் மிகமிகப் பெரிது. ஆயினும் அந்த அருமை பெருமைகளை நாம் கொஞ்சமும் நினையாமல் அல்லும் பகலும் உலகியலிலேயே உழன்று உடலை ஓம்புதற்கும், ஆடம்பர வாழ்வு வாழ்தற்கும், எண்ணாத

எண்ணம் எல்லாம் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுவதி லேயே காலத்தைக் கழித்தொழியாது அரிதிற் கிடைத்த பிறப்பின் பயனை அடைவதற்குச் சிறிதாயினும் முயலுதல் வேண்டும். அஃதாவது பெரும்பான்மையான நேரத்தை உடல் வாழ்க் கைக்குச் செலவிட்டபோதிலும் சிறிது நேரத்தையாவது ஆன்ம லாபத்தின் பொருட்டு நாம் செலவிடல் வேண்டும்.

## ஆசைவிடுத்து ஆன்ம லாபம் தேடுவோம் :

புழுவுக்கும் குணம் நான்கு; எனக்கும் அதே - புழுவுக்கு இங்கு எனக்கு உள்ள பொல்லாங்கு இல்லை " என்ற அப்பர் வாக்குப்படி, உண்பது, உறங்குவது, உலகியலில் வரும் இன்பத் துன்பங் களை மகிழ்ச்சியோடோ அல்லது வருத்தத்தோடோ அனுப விப்பது, நாள்வந்தால் இறப்பது என்பது உலகில் உள்ள சிற்றுயிர்களுக்குங் கூடத்தான் இருக்கின்றன. அவைகளையே மனிதனும்செய்து கழிவானுனல், அவன், தன்னை மற்றைய பிறப்புக்களைக் காட்டிலும் உயர்ந்தவன் என்று சொல்லிக் கொள்வதனுல் என்ன பயன் !

முன்னே காட்டிய அப்பர் திருமொழியின்படி சிற்றுயிர் களாவது உணவு தேடி உண்டு வாழ்வதோடு நின்று விடுகின்றன; பிற தீய குணங்களை உடையனவா யிருப்ப தில்லை. ஏதோ இயற்கை அமைப்பில் பசிக்காகப் பிற உயிரை உணவிற்கு வேண்டும் அளவு கொன்று தின்ப தோடு நின்று விடுகின்றன. மனிதன் 'தான் அளவற்ற காலம், அளவற்ற வசதியுடன் நல்வாழ்வு வாழவேண்டும்' என்று பேராசை கொண்டு, அந்தப் பேராசை காரணமாக வஞ்சனை, பொய், பொருமை, முதலியவைகளை உடையவனுய்த் திட்ட மிட்டுப் பிறருக்குத் தீங்கிழைத்து வாழத் துணிகின்ருன். " ஆசைக்கோர் அளவில்லை " என்ற தாயுமான அடிகள், " அகில மெல்லாம் கட்டி ஆளினும் கடல் மீதிலே ஆணை செலவே நினைவர் " என்ருர். ஆனுல் இன்று கடல்மீதில் மட்டுமன்று; வானத்திலும் தனது ஆணைசெல்ல வேண்டுமென்று மனிதன் ஆசைப் படுவ தையும், அந்த ஆசையால் நிகழ்கின்ற அதிசயமான அட்டுழியங் களையும் கண்ணுலே காண்கின்ருேம். மிகமிக மேலான பிறப்பை எடுத்த மனிதன் இந்த ஆசை காரணமாக மிகமிக இழிந்த பிறப்புக்களிலும் கீழ்ப்பட்டவனுகின்ருன். இது தான் இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் பயனுக உள்ளது. எனவே விஞ்ஞானம் மனிதனை மனிதனுக வாழச் செய்யாது; மெய்ஞ்ஞானமே மனிதனை மனிதனுகவாழச் செய்யும். அதனுல் விஞ்ஞானம் கூடாது என்பது

அல்ல; மெய்ஞ்ஞானம் இல்லாத விஞ்ஞானம் பயன் தராது என்பதுதான் கருத்து.

## தீநெறி விலக்கி நன்னெறி சார்வோம் :

மெய்ஞ்ஞானத்தைத் தர நிற்பனவே சமயங்கள் என்பது தெளிவு. எனவே, சமயமே மனிதனை மனிதனுக்கும் என்பது வெள்ளிடை மலை. ஆன்ம லாபம் மட்டுமன்று; உலகியலில் நல்வாழ்வு, சமுதாயநலம் என்பவற்றைக்கூடச் சமயத்தின் வழியேதான் மக்கள்பெற இயலும். "எச்சமயத்தோர் சொல்லும் தீதொழிய நன்மை செயல்" என்று ஔவையார் கூறியதுபோல, யாதொரு சமயமும் மக்களைத் தீநெறியின் நீக்கி நல்வழியிற் செலுத்தத்தான் முயல்கின்றது. ஆனால், சமயத்தைக் கடைப்பிடிக்கின்ற மனிதன் அதிலும் நன்னெறியை விடுத்துப் பூசல் விளைக்க எண்ணுகின்றான்; செய்கின்றான். இது குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டதற்கு ஒப்பானது.

"சைவ சமயமே சமயம்" என்றும், "சைவத்தின்மேற் சமயம் வேறிலை" என்றும் நம் முன்னோர்கள் கூறியவாறு, நமது சமயமாகிய சைவம், சமயங்கள் எல்லாவற்றிலும் தலையாய சமயம். இதை இன்றைய ஆராய்ச்சியாளர்களும் ஒப்புக்கொள்கின்றனர். நமது சிறப்பை நாம் உணர்ந்து உரைப்பது, பிற சமயங்களை இழித்தலாகாது.

## சீர்மிகு காழியில் சித்தாந்தப் பெருக்கு :

நமது சைவ சமயம் இன்றைய விஞ்ஞானத்திற்கும், உடல் நலத்திற்கும், உயகியலுக்கும் ஒத்ததாய் இருந்து, அதே சமையத்தில் உயர்ந்த ஞானத்தையும் அளிப்பதாக உள்ளது. அத்தகைய ஞானத்தை வழங்கும் நமது சமயத்தில் ஞானசம்பந்தர்களாகவே பலஆசாரியர்கள் விளங்கிஅருள் நெறியைப் பரப்பினார்கள். முதல் ஞானசம்பந்தர் திருஞானசம்பந்தர். அவர் திருவவதாரம் செய்து மூன்றாண்டிலே அம்மையின் ஞானப்பாலை உண்டு ஞான சம்பந்தராய் - ஞானத்தின் திருவுருவாய் விளங்கி ஞானத் தமிழால் நமது நாட்டினை ஞான பூமியாக விளங்கச் செய்தார். அத்தகைய அருட்பேராசிரியர் அவதரித்தருளி அருள்பெற்ற அருமைத் தலமே இந்தச் சீகாழித் திருத்தலம். அறுபத்தெட்டு ஆண்டுகளாகப் பல வகையில்சைவத்தை வளர்த்துவரும் சைவ சித்தாந்த மகாசமாஜம் இன்று இச்சீகாழித் திருத்தலத்தில் தனது அறுபத்தெட்டாவது ஆண்டு விழாவைக் கொண்டாடுதல் மிக்க மகிழ்ச்சியைத் தருவதோடு, மிக்க பயனைத்தருவதுமாகும்.

## நம்பந்தம் அறுத்த சம்பந்தர் மூவர் :

கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் அவதரித்து ஞான ஒளி பரப்பிய சமயாசாரியராகிய அந்த ஞானசம்பந்தரை அடியொற்றி, கி. பி. 14 ஆம் நூற்றாண்டில் சந்தானாசாரியருள் ஒரு ஞானசம்பந்தர் வாழ்ந்தார். அவர் மறைகளையெல்லாம் நன்கு ஓதியுணர்ந்திருந்தமையால் 'மறைஞானசம்பந்தர்' என அழைக்கப்பெற்றார். 'சைவ சமயத்தின் நெடுங்காலவாழ்விற்குப் பல வகையில் வழி வகுத்த ஸ்ரீ உமாபதி சிவாசாரியராகிய பேராசிரியரை உலகிற்கு அருளியபெருமை அந்த மறைஞான சம்பந்தருக்கே உரியது.

மறைஞான சம்பந்தரின் மாணாக்கர் உமாபதி தேவரது வழியில் வந்த ஞான பரம்பரையில் கி. பி. 16 ஆம் நூற்றாண்டில் விளங்கிய ஞானசம்பந்தரே, நமது தருமையாதின ஆதிபரமாசாரியராகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர். அவரது அருள்நோக்கில் விளங்கி வரும் தருமையாதீனம் திருஞானசம்பந்தர் திருவருட் சிறப்பிற்கு முதலாகிய தோணியப்பர், சட்டைநாதர் ஆலயத்தை நன்கு புரந்துவருவதுடன், திருஞானசம்பந்தர் ஞானப்பால் உண்டருளிய திருமுலைப்பால் திருவிழாவை மிகச் சிறப்புற நிகழ்த்திவருவது பலரும் நன்கறிந்தது.

## பிள்ளையார் விழாக் காணும் பெருமை தருமைக்கே !

திருஞானசம்பந்தர் தம் திருமணக் காலத்தில் அடியார்கள் புடைசூழ சிவசோதியில் கலந்தருளிய ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத் தியாகராஜசுவாமி தேவஸ்தானமும் தருமையாதீன அருளாட்சிக்கு உட்பட்டது என்பதும், திருஞானசம்பந்தர் சிவசோதியில் கலந்தருளிய ஐதிகத் திருநாள் ஆண்டுதோறும் மிகச் சிறப்பாக நிகழ்த்தப்பெற்று வருவதும் இங்கே குறிப்பிடத்தக்கனவாகும். ஞானசம்பந்தர் திருப்பெயரைத் தாங்கி விளங்கிய ஸ்ரீகுருஞானசம்பந்தரால் தோற்றுவிக்கப்பெற்ற தருமையாதீனம் இவ்விரண்டு திருக்கோயில்களையும் பரிபாலித்துவரும் சிறப்பிலிருந்து திருஞானசம்பந்தரோடு நமது ஆதீனத்திற்கு உளதாகிய தொடர்பு நன்கு விளங்குவதாகும்.

ஆளுடைய பிள்ளையாரின் அந்த அருள் நிலைக்கு இடமாகிய இத்திருத்தலத்தில் நிகழும்சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் மாநாட்டினை நம் ஆதிபரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தரது அருள்வழி நின்று தொடங்கி வைப்பதில் நாம் மிக்க மகிழ்ச்சி கொள்கின்றோம். சமாஜ அன்பர்களின் விருப்பத்தையும், அதனை மிகச் சிறப்பாக நிறைவேற்றும் வரவேற்புக் குழுவினரையும்,

அவர்கட்கு உறுதுணையாய் நின்று உதவும் சீகாழிப் பெருமக்களையும் பாராட்டுகின்றோம்.

## முனைந்து பணிசெய்யும் முதலியார் குடும்பம் :

சீகாழி என்றதுமே ஞானசம்பந்தரும் ஞானசம்பந்தருக்கு ஞானப்பால் அளித்த அம்மையப்பருமே நம்நினைவிற்கு வருவார்கள். அடுத்து எல்லோர் நினைவிலும் இடம்பெறுவது அவ்வூரில் நெடுங்காலமாக வாழ்ந்துவரும் சான்றாண்மைமிக்க முதலியார் குடும்பம். முதன்மையாரைத்தான் முதலியார் என்று அழைக்கிறோம். அப்பெயருக்கு ஏற்பவே அக்குடும்பத்தினர் அன்றும் இன்றும் நடையுடைபாவனைகளாலும் குணத்தாலும் முதன்மையுடையவராகவே திகழ்ந்து வருகின்றனர். "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்ற மூதுரைக்கு ஏற்பப்பலரையும் அரவணைத்துச் செல்லும் ஆற்றல்மிக்கது அவர்கள் குடும்பம். திருவாசக பூஜை அல்லது சிவபூஜையை வழிவழியாகச் செய்து வருகின்ற நல்ல குடும்பம். பகைமை உணர்வு படைத்தவரையும் பாராட்டிப் பண்பாளராக்கும் குடும்பம். பல்வேறு வகையாக மாறிவருகின்ற காலப்போக்கிலும் இக் குடும்பத்தினர் சைவம், தமிழ், தர்மம் என்றால் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு அறநெறி போற்றுபவராகத் திகழ்கின்றனர். அக்குடும்பத்தார் முன்னின்று, இவ்வூரில் உள்ளவர்களையும் அருகிலுள்ளவர்களையும் இந் நல்லறப் பணியில் பங்குகொள்ளச் செய்து அவர்களுடைய உதவியுடனும் ஒத்துழைப்புடனும் இம் மாநாட்டைச் சீரும் சிறப்புமாக நிகழ்த்துவிக்கின்றார்கள்.

1942ஆம் ஆண்டில் இங்கு நிகழ்ந்த சைவ சித்தாந்த மகாசமாஜ ஆண்டு விழாவை அன்று நடத்திய அதே குடும்பத்தினரே இன்றும் இம்மாநாட்டை முன்னின்று நிகழ்த்துவிக்கின்றார்கள். இவ்வாண்டுவிழாவையும் இக்குடும்பத்தின் மூத்த தலைமுறையினரே நடத்த ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. திருவருட் செயல் அடுத்த இளந்தலை முறையினரால் நிகழ்த்துவிப்பதாக அமைந்தது. இவர்கள், வைதிகப்பொலிவோடும் தெய்விகச் சிறப்போடும் இவ்விழாவை நல்லமுறையில் கொண்டாட வேண்டும் என்று விரும்பித் தெரிவித்துச் சென்ற சுப்பராய முதலியாரது வார்த்தையைச் சிறப்பாக மேற்கொண்டு நிகழ்விப்பது மிக்கமகிழ்ச்சியைத் தருகின்றது. இவர்கட்கும் இவர்களுடன் ஒத்துழைத்து உதவும் மற்றைய நல்லறக் குடும்பங்கட்கும் இன்றுபோல் என்றும் இறையருளும் குருவருளும் மிகப் பெருகி வாழ்விப்பனவாக.

இவ் ஆண்டு விழாவில் சைவர் மாநாட்டுடன் சைவ மங்கையர் மாநாடு, சைவ இளைஞர் மாநாடு நடைபெறுதல் மகளிரையும், இளைஞர்களையும் சமய உணர்வு உடையராக்குதற்கு வழியாகும். எனினும் இத்தகைய முயற்சிகள் ஆண்டுக்கு ஒரு முறை ஒருநாள் நடைபெறுதல் போதியதாகாது. சமய உணர்வை ஆடவர் பெண்டிர் இளைஞர் அனைவரும் அடைதற்கான பணிகளைப் பலநாளும் பலவிடத்தும் நிகழ்த்துதல் வேண்டும். சமாஜம், "சித்தாந்தம்" என்னும் மாத இதழ், "சைவ சித்தாந்தா" என்னும் ஆங்கில முத்திங்கள் இதழ் இவைகளை வெளியிட்டு வருவதும், ஆண்டுதோறும் இளஞ் சைவப் புலவர், சைவப்புலவர் தேர்வுகளை நடத்துவதும் சிறந்த சமயப் பணிகளே. மேலும் பல பணிகளைப் பயனுள்ள வகையில் நடைபெறச் செய்தல் வேண்டும்.

சமாஜம் : செய்ததும் : செய்யவேண்டுவதும் :

தமிழ் மன்னர்களும், சைவ ஆதீனங்களும் போற்றி வளர்த்த சைவநெறியை, மன்றங்களும், சபைகளும் போற்றி வளர்த்துள்ளன. அவற்றுள், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், தூத்துக்குடி சைவ-சித்தாந்த சபை, திரிசிரபுரம் சைவ - சித்தாந்த சபை, பூவாளூர் சைவ-சித்தாந்த சபை, சென்னை சைவ - சித்தாந்த மகாசமாசம் போன்றன குறிப்பிடத்தக்கவையாகும். சமாசம் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே திருமுறைகள் பன்னிரண்டையும், சித்தாந்த சாத்திரங்கள் பதினுன்கையும் எளிய விலையில் வெளியிட்டமை மிகவும் பாராட்டத்தக்கதாகும்.

68 ஆண்டுகளாகப் பணிபுரியும் சமாசம், தனக்கென்று ஒரு கட்டிடமும், வேண்டிய பொருள் வசதியும் இல்லாதிருப்பது வருந்தத்தக்கதாகும்.

சைவக் குடும்பத்தைச் சேர்ந்த இளைஞர் பலர் உலகாயதர்களாகி வருகின்றனர், அவர்களைச் சிவநெறிக்கு ஆளாக்க வேண்டிய பொறுப்பும் நமக்கு இருக்கிறது. பெரியவர்கள் தலைவர்களாக – வழிகாட்டிகளாக இருந்து, இளைஞர்களை முன்னேடிகளாகவைத்து, சமாசப் பணிகளைச்செய்ய, சமாசத்தில் உள்ள பெரியவர்கள் முன்வருதல் சைவத்திற்கும் சமாசத்திற்கும் நலம் பயப்பதாகும். வருங்காலத்தில் சமாசம் இம்முறையில் பணி செய்து பல்லாண்டு வாழ்வதாக.

கற்றலும் கேட்டலும் கடைப்பிடித்து வாழ்வோம் :

சைவர் மாநாடு முதலிய மாநாடுகள், இவ்வாண்டில் தக்க தலைவர்கள் தலைமையில் தகுதி வாய்ந்த அறிஞர்களது பேச்சுக் களுடன் இங்கு நடைபெறுதல் சிறப்பைத் தருகின்றது. தலைவர் களும், பேச்சாளர்களும் சைவத்தைப் பற்றிய பல உண்மை களையும் ஒழுக்க நெறிகளையும் அவர்கள் தங்கள் நுண்மாண் நுழைபுலனின் பயனாக நன்கு விளக்குவார்கள். கேட்டு இன்புறு கின்ற யாவரும் கேட்டவற்றில் ஒரு சிறுகூற்றையாவது தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடிக்கவேண்டும்.

வாழ்க சமாஜம் ! வளர்க சைவம் !

விழாவின் அங்கமாக ஆலயங்களின் கூட்டு வழிபாடு நடை பெறச் செய்திருப்பது குறிப்பிடத்தக்க ஒரு நற்பணி. அன்பர்கள் சென்று வழிபடும் ஆலயங்களில் அருட்திரு மேனி கொண்டு எழுந்தருளியிருக்கின்ற இறைவன், 'சைவசித்தாந்த மகா சமாஜத்தின் அறுபத்தெட்டாவது ஆண்டுவிழா இனிது நிகழ்ந்து பலர்க்கும் சமயப் பற்றை விளக்கவும், விழாவை நன் முறையில் முன்னின்று நடத்துவிக்கும் சீகாழி முதலியார் குடும்பத் தினரும், மற்றும் பெருமக்களும், விழாவில் பல்லாற்றானும் பங்கு பற்றிச் சிறப்பிக்கும் அன்பர்கள் பலரும் பன்னலங்களும் பெற்று நீடு வாழவும், வெள்ளி விழாப் பொன் விழாக்களைக் கண்ட சமாஜம் மேலும் வைரவிழாக் கண்டு பல்லாண்டுகள் சைவப் பணியாற்றி வளர்ந்தோங்கவும் திருவருள் புரிக' என நம் செந்தமிழ்ச் சொக்கன் திருவடிகளைச் சிந்தித்து இவ்விழாவினைத் தொடங்கிவைக்கின்றோம். வாழ்க சைவம்! வளர்க சமாஜத்தின் பணிகள்!

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Panchanatheeswaraswamy Devasthanam, Thiruvaiyaru.

Had the opportunity to have visited the Panchanatheeswarar Swamy Temple and worshipped the God and Goddess in a most peaceful manner. The Executive Officer explained to me the entire history of temple and he rendered all facilities to have a good dharshan of the Lord the God and Goddess. The premises of temple are kept neat and clean.

(Sd.) P. Sankaran,
I. G. R.

உ

சிவமயம்

# "பொங்கல் வாழ்க"

## புலவர், திரு. இரா. செல்வக்கணபதி

ஆதிரைநாள் வழிபாட்டில் இறைவன் தந்த
அருட்பொங்கும் திருநாளே பொங்கல் என்போம்!
வீதியெலாம் சிவநாமம் ஒலித்தார்க் கையன்
வேண்டுவன நல்கும்நாள் பொங்கல் நன்னாள் !
தீதில்லாப் பாவைமார் நோற்ற நோன்பின்
திருநாளே பயன்நல்கும் பொங்கல் என்போம் !
பேதித்து வளர்த்தாளின் கருணை பொங்கும்
பெருநாளே தைப்பொங்கல் வாழ்க என்போம் !

பொங்கிடுக நெஞ்சங்கள் : மக்கள் வாழ்வில்
பொலிந்திடுக நலமெல்லாம் : இறைவன் நாமம்
எங்கெங்கும் ஒலித்திடுக : ஏழை வாழ்வில்
இனிமைக்கு விடிவெள்ளி தோற்றஞ் செய்க !
தங்கிடுக நலமெல்லாம் : தமிழர் வாழ்வில்
தாழ்வில்லா முன்னேற்றம் விளைக! வாழ்க !
மங்கலமாம் தைப்பொங்கல் வருக ! வாழ்க !
மானிடமே வென்றிடுக ! இறைமை காக்க !

உழைப்புக்குத் தலைவணங்கி : நெஞ்சத் தீமை
உடைத்தெறிவோம் : பண்பாட்டைப் புதுக்கிக் [கொள்வோம் :
தழைத்தாழ வேரோடிப் போன மக்கள்
தரமான இறையன்பை மலரச் செய்வோம் :
கழைக்கூத்தாய் எண்ணுது பொருள் பொதிந்த
கருத்தான நெறிவாழ்க்கை வகுத்துக்கொள்வோம்;
பிழைக்காது வளமெல்லாம் : இறைவன் உண்டு:
பிறங்கட்டும் திருநாளே ; பொங்கல் வாழ்க !

௨

குருபாதம்

# கல்வியின் பயன்

கல்வி கரையில்லாத அளவுடையது. மனித வாழ் நாளோ சிறிது. கல்வியின் துணையின்றி மனிதன், அறிவைச் செம்மைப்படுத்தவோ வளர்க்கவோ நினைப்பது வீண் முயற்சியேயாகும். கல்வியைக்கற்போர் பலரும், பலவகையான இடர்ப்பாடுகளையும், துன்பங்களையும் பெற்றே அதனைக் கற்கின்றனர். கல்வியின் பயன் யாது? அறிவு வளர்ச்சிதானே! அவ் அறிவின்பயன்கொண்டு, இறைவனை உணர்ந்து, அவனுக்கு ஆளாகி உள்ளம் அடங்கி உயர்வதே முறையாகும்.

உள்ள அடக்கத்தையும், இறையுணர்வையும் செம்மைப் படுத்த உதவும் கல்வியால் நாம் எப்படிப்பயன் கொள்ளுகின்றோம்; நாம் பெரும்பாலும் கற்றாரோடு வீண்வாதஞ் செய்து தர்க்கமிட்டே பொழுதினைக் கழித்துக் கல்வியின் உண்மைப் பயனை இழக்கிறோம் அறிவுபெற்றிருந்தும் அறிவிலார் செயல்களில் ஈடுபடும் மக்களைக் கண்டு கழிபேரிரக்கம் கொண்டு, நமது தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உளம்வெதும்புகின்றார். மக்கள்மீது கொண்ட கருணையால் இனியபாடல் வெளிப்படுகிறது. இதோ அந்த இனிய சிவபோகசாரப் பாடல் :-

“ கற்க இடர்ப் பட்டுமிகக் கற்றால் எல்லாங் கற்றவர்பால்
தர்க்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ—நற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க் காளாகி
உள்ளம் அடங்கவல்ல வோ ”

# தவம்

நீதிபதி, கனம். எஸ். மகராஜன் பி. ஏ., பி. எல்,,

மனித மனம் அலட்டிக்கொண்டே இருக்கிறது. ஒரு நிலையில் நிற்பதில்லை. போதாக்குறைக்கு, மனித உடலிலே ஐந்து மடைகள் வைக்கப்பட்டிருக்கின்றன; ஐம்புலன்களாகிய மடைகள். இம்மடைகள் வழியாக உலகச்செய்திகள், மனசுக் குள்ளே பாய்ந்த வண்ணமிருக்கின்றன. புறச்செய்திகள் வந்து பாயாமலிருக்கும்போதே, இந்த மனம் மருகுவதும், மயங்குவது மாயிருக்கும். வெளிச்செய்திகள் வேறு மனசைத் தாக்கியவுடன், சொல்லவே வேண்டியதில்லை, ஒரே குரங்காட்டந்தான்.

இந்தக் குரங்காட்டத்தை மட்டுப்படுத்தி மனசை ஒரு நிலையில் நிறுத்துவதுதான் தவம் ; தவத்தின் மூலம் சிதறுண்டு கிடக்கும் சக்திகள் ஒருமுனைப்படுகின்றன; என்றும் இல்லாத ஆற்றல் தவத்தால் நமக்குக் கிட்டுகிறது.

" நில்லென்று சொல்லி மனம்
நிலைநிறுத்த வல்லார்க்குக்
'கொல்' என்று வந்தயமன்
குடியோடிப் போனனே."

என்று சொன்னர் ஒரு சித்தர். நோற்றலால், அதாவது, தவத் தால் ஏற்படும் ஆற்றல் எப்படிப்பட்டதென்ருல் கூற்றத்தையே அது உதைத்துத் தள்ளிவிடுமாம்.

" கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு "

என்று சொன்னர் வள்ளுவர்.

நம் உள்ளத்தில் தூய்மையும் கட்டுப்பாடும் வளர, வளர நம் எண்ணத்துக்கே வலுவேறுகிறது. உலக நிகழ்ச்சிகளையே பாதிக்கும் சக்தி நம் கருத்துக்களுக்கு ஏற்படுகிறது. ஜட உலகத் தில் அணுகுண்டுக்கு இருக்கும் ஆற்றலைக்காட்டிலும் வன்மை யுடையது நோன்பிருந்து, மனசைக் கட்டுப்படுத்தியவனுடைய எண்ணம். பகைவர்களை அழிக்கும் சக்தி அதற்கிருக்கிறது. நண்பர்களுக்கு ஆக்கம் கொடுக்கும் சக்தியும் அதற்கிருக்கிறது.

" ஒன்னர்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின், தவத்தால் வரும் "

"வேண்டியதை வேண்டியபடியெல்லாம் அடையும் சக்தியைத் தவம் நமக்குக் கொடுக்கிறது. ஆகையால், இப்பொழுதே, இங்கேயே தொடங்குங்கள் உங்கள் தவத்தை !" என்று கட்டளை போடுகிறார் வள்ளுவர்.

"வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்"

தவத்தின் சக்தி இவ்வளவு சிறப்பானது என்று தெரிந்தும், அதை மேற்கொள்ளாமல் இருக்கிறார்களே மக்கள்! இதன் காரணம் என்னவென்று வள்ளுவர் அதிசயிக்கிறார். அவருக்குச் சிரிப்பு வருகிறது. நகைச்சுவையோடு ஒரு காரணத்தைக் கற்பிக்கிறார், "தவம் செய்யும் துறவிகளுக்கு உணவு முதலிய வசதிகள் செய்யவேண்டும். அவர்களைப் போற்ற வேண்டும், நாமும் தவம் செய்யத் தொடங்கிவிட்டால் துறவிகளைப் பேணுவதற்கு ஆள் இல்லாமல் போகுமே என்று நினைத்து, அவர்கள் தவத்தைக் கைவிட்டு விட்டார்களோ! தவசிகளை மதிப்பது அவர்களுடைய தவத்துக்காக. அப்படியானால் தவசிகளை மதிப்பதிலேயே பொழுதைப்போக்கிவிட்டு, தவச்செயலைச் செய்வதை அவமதிக்கலாமா?" என்று கேட்கிறார்.

"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்"

சுவையான கேள்வி இது !

---

## பார்வையாளர்கள் குறிப்பு நகல்

தருமபுரம் ஆதீனம்

### திருக்குவளை ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானம்.

சோலை சூழ்ந்த அமைதியான இடத்தில் குடிகொண்டிருக்கும் இத்தலத்தின் எம்பெருமானைத் தியாகராஜரைத் தரிசிக்கும் போது மனதில் வேண்டிய நிறைவும், என்றும்காணாத அமைதியும் ஏற்படுகிறது. கோவிலும், சுற்றுப்புறமும் சுத்தத்திற்கும், இலக்கணம். கோயில் சிப்பந்திகள் உபசாரத்திற்கும் அன்புக்கும் இலக்கணம். அய்யனின் அன்பும், அன்னையின் அருளும் எல்லோர் மனத்திலும் என்றும் தங்குக ?

(ஒ-ம்.) எம். பி. ஸீதாராமன் B. Sc.' B. L.,
23—12—73. அடிஷனல் மாவட்ட முன்சீப்,
திருத்துறைப்பூண்டி.

# அபிடேக முறை

ஆன்மார்த்தமாயினும்,பரார்த்தமாயினும் பூசையில்அபிடேகம் சிறப்புடைய ஒன்று அந்த அபிடேகங்களை இன்ன முறையில் செய்யவேண்டும் என்பதைச் சிவாகமங்கள் கூறுகின்றன. அம் முறையில் ஆகமங்களிலும் சிறிது சிறிது வேறுபடக் கூறுவன உள. பெரும்பான்மையான ஒரு முறையைக் கிழ்க்காணுமாறு 'அண்ணுமலைச் சதகம்' என்ற நூல் ஒரு பாடலில் கூறுகின்றது.

சுத்தசலம் அபிடேகம் நல்லெண்ணெய்
அரிசிமாத் தூள், மஞ்சள் நெல்லி முள்ளி,
தூபஞ்ச கௌவியமொடு, ஆவின்நெய்
பால், தயிர் சுவையான பஞ்சாமிர்தம்,
உத்தபல,மா, கதலி, மாதுளையும், எலுமிச்சை,
ஓங்குதம ரத்தை, நார்த்தை,
ஒண்கனிச் சுளைகுளஞ்சித், தேன், திரட்டுபால்;
உயர்கருப் பஞ்சாற்றுடன்,
மெத்தும் இளநீர். அன்னம், வில்வநீர்,
தபனநீர், மிளிர்பொன். இரத்நோதகம்,
மென்பசுங் கர்ப்பூரம், நற்பனீர், சந்தனம்,
விளங்குதா ராபிடேகம்
அத்தநிற் கித்தகைய அபிடேக மேபுரிந்
தருள்பெறு வசந்தராயர்
அண்ணு வினிற் றுதிசெய் உண்ணு
முலைக்குரிய அண்ணு மலைத்தேவனே.

தூயநீர். நல்லெண்ணெய், மாக்காப்பு, மஞ்சட் காப்பு, நெல்லிக்காப்பு, முள்ளிவிதைக்காப்பு, பஞ்சகௌவியம், பசுவி னின்றும் பெறப்படுகின்ற நெய், பால், தயிர், பஞ்சாமிர்தம், பலா, மா, வாழை என்னும் முறைப்பட்ட முக்கனி, மாதுளம் பழம், எலுமிச்சம் பழம், தமரத்தம் பழம், நார்த்தம் பழம், குளஞ்சிப்பழம், தேன், திரட்டுப்பால், கருப்பஞ்சாறு, இளநீர், அன்னம், வில்வ நீர், தபன நீர், பொன் நீர், இரத்தின நீர், பச்சைக் கர்ப்பூரம், பன்னீர், சந்தனம் சகஸ்ர தாரை என்ற முறையில் அபிடேகம் செய்பவர் சிவபெருமானது அருளைப் பெறுவர். ஒவ்வோர் அபிடேகத்திற்குப் பின்பும் முதலில் சொல்லப்பட்ட தூயநீர் அபிடேகம் செய்தற்கு உரியது.

குறிப்பு :— நெய், தேன், பஞ்சாமிர்தம் இவைகட்குப்பின் இளவெந்நீர், இளநீருக்குப்பின் விபூதி, சந்தனத்திற்குப்பின் சங்கு நீர் முதலியவைகளும் ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளன. அன்னம் வழக்கத்தில் இல்லை. 'அன்னுபிடேகம்' என்ற சிறப்புக் காலத்தில் மட்டும் செய்யப்படுகின்றது. எவ்வகையிலேனும் அபிடேகங்களை அன்புடன் செய்பவரும், செய்விப்பவரும் திருவரு ளைப் பெற்று உய்வார்கள்.

தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்



மாயூரத்தை அடுத்துள்ள மல்லியக்கொல்லையில் அமையவிருக்கும் பாலாஜி பேப்பர், போர்ட்ஸ் பிரைவேட் லிட்.. கட்டுமான வேலைகளுக்கு அடிக்கல் நாட்டி ஆசிவழங்கியருளிய காட்சி.
9—12—73

தருமையாதீனம் 26-வது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்



மாயூரத்தை அடுத்துள்ள மல்லியக்கொல்லையில் அமையவிருக்கும்
பாலாஜி பேப்பர் போர்ட் பிரைவேட். லிட்-க்கு
அடிக்கல் நாட்டியருளிய காட்சி.
9—12—73.

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான

திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி தேவஸ்தானத்தில்

ஸ்ரீ சரபமூர்த்திக்கு

## சரப வேள்வியும் லக்ஷார்ச்சனையும்

ஆணவத்தால் தானே பரம்பொருள் என்று செருக்குற்ற இரணியனைத் திருமால் - நரசிங்க வடிவங்கொண்டு அழித்து அவனது குருதியைக் குடித்த காரணத்தால் மதங்கொண்டு உலகிற்குத் துன்பம் விளைத்த பொழுது, அந் நரசிங்கத்தை அடக்குவதற்கு, சிவபெருமான் எடுத்த வடிவமே ஸ்ரீ சரபர் திருவுருவம். இவர் திருபுவனம் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ளார். இவரை ஞாயிற்றுக்கிழமைகளில் வழிபடுவது சிறந்தது.

---

## நன்றிக்கோர் நற்சான்று !

கடமைக்காகத் தங்களது உயிரையே திரணமாக மதித்து தீரமாக நடந்துகொண்ட ஒரு வீர தம்பதியைப் பற்றி தகவல் கிடைத்திருக்கிறது.

லண்டனில் உள்ள ஒரு தபால் நிலையத்தில் சப் - போஸ்ட்மாஸ்டராகப் பணியாற்றும் திரு. சுரீந்தர்சிங் என்பவரை ஆயுதந்தாங்கிய இரு கொள்ளைக்காரர்கள் அணுகி, தபால் நிலைய இரும்புப் பெட்டியின் சாவியைக் கொடுக்கும்படி கேட்டனர். இல்லையேல் " குத்திக் கொன்றுவிடுவோம் " என்று மிரட்டினர்.

" என் உயிர் உள்ளவரைக்கும் நீங்கள் எதையும் எடுத்துச்செல்ல முடியாது, நான் பிரிட்டிஷ் சர்க்காரால் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கிறேன். என் கடைசி மூச்சு உள்ளவரை, உப்பிட்டவருக்கு நான் விசுவாசமாக இருக்க வேண்டும் " என்று அந்த சீக்கிய அதிகாரி கூறினர்.

இதைக்கேட்டு ஆத்திரம் அடைந்த கொள்ளைக்காரர்களில் ஒருவன், அந்த அதிகாரியைக் கொல்லும்படி தனது சகாவைக் கோரினன். கத்தியுடன் அந்த ஆள் ஒருஅடி எடுத்துவைப்பதற்கு முன், திரு. சுரீந்தர்சிங்கின் மனைவி திருமதி ஷரன் அந்தக் கொள்ளையன் மீது பாய்ந்தார்; அப்போது அவரது கையில் பலமான வெட்டுக்காயம் ஏற்பட்டது கொள்ளையர்கள் மிரண்டுபோய் ஓடிவிட்டனர்

" அவள் இல்லாதிருந்தால் இந்நேரம் நான் எங்கோ போயிருப்பேன் ! " என்று பெருமையுடன் கூறுகிறார் சுரீந்தர்சிங்.

இந்த வீர தம்பதியைப் பிரிட்டிஷ் அரசாங்கம் கௌரவிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

நன்றி ! —தினமணி 9—1—74.

அதிலும் சிறப்பாக அன்று இராகுகால வேளையில் வழிபட்டு அன்பர்கள் பலர் பயன்பெற்று வருகின்றனர்.

உலகில் பகையும் பிணியும் நீங்கி வசியும் வளனும் சுரக்கவும் போர்க்குமுறல் அடங்கி அமைதி நிலவவும் இப் பெருமானுக்கு சகஸ்ர நாமார்ச்சனைரூபமாக லட்சார்ச்சனை நடைபெறுதல் அனைவரும் அறிந்தது 10—1—74 வியாழன் காலை சரப வேள்வி முதலியவற்றுடன் லக்ஷார்ச்சனை நிறைவு பெறுகிறது.

அன்பர்கள் கலந்துகொண்டு வழிபட்டு தொடர்ந்து நடைபெறும் லக்ஷார்ச்சனை சரபவேள்வி முதலியவற்றில் பங்கு கொண்டு உய்வார்களாக. உலகத்தில் அமைதிநிலை பெற வேண்டி. அமைதி காக்கும் ஸ்ரீ சரபர் திருவுருவத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிட்டு மகிழ்கின்றோம்.

சகஸ்ரநாமார்ச்சனை 1-க்கு கட்டணம் ரூ. 10—00.

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி :-

கேஷியர் ; ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம்
திருபுவனம் P. O. தஞ்சை மாவட்டம்.

* * * * *

தருமையாதீனம்

## ஸ்ரீ ஞானம்பிகை உடனுறை ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயிலில்

# கோடி அருச்சனை

தருமையாதீனம் நானூறு ஆண்டு வரலாற்றுச் சிறப்புடையது. இதனைத் தோற்றுவித்தருளியவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர். இவர் சிவசமாதி கூடி, அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத் திருவுருக்கொண்டு இன்றும் அருள்பாலித்து வருவது தருமபுரத்தில் மேலைக்கோயில் என வழங்கும் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில்

உலக நலங்கருதி தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளப்பாங்கின்வண்ணம், சுவாமிக்கும் அம்பாளுக்கும் கோடி அருச்சனை நடைபெறுகிறது இன்றுவரை பதின்மூன்று லக்ஷம் பூர்த்தியாகி பதினான்காவது லக்ஷார்ச்சனை நடைபெற்று வருகிறது. சிவபக்தி, குருபக்தி மிக்க அன்பர்கள் பலர் பங்குகொண்டு வழிபட்டுப் பயன் பெற்று வருகின்றனர். அன்பர்கள் பலரும் பங்குகொண்டு உய்தி பெறுவதற்கு வாய்ப்பாக கீழ்க்காணுமாறு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

சுவாமி அம்பாள் சகஸ்ரநாமார்ச்சனை இரண்டுக்கும் ரூ 10. கட்டணம் பணவிடை செய்தால் அருச்சனை செய்து பிரசாதங்கள் அனுப்பிவைக்கப்பெறும். கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி:-

மானேஜர்; தருமையாதீனம்
தருமபுரம், மாயூரம் அஞ்சல்

# சிவஞானசித்தியார் தெளிபொருள் விளக்கம்

தருமையாதீனப் புலவர், சித்தாந்தக்கலைமணி

திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

( மலர் 33. இதழ் 1. பக்கம் 27 இன் தொடர்ச்சி )

## சத்தி வணக்கம்

அடுத்துச் சத்தி வணக்கம் கூறுகின்றார்.

3. ஈசன்அருள் இச்சைஅறி வியற்றல் இன்பம்
இலயமொடு போகமஅதி கார மாகித்
தேசருவம் அருவுருவம உருவ மாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப்
பேசரிய உயிரையெலாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப் பிறப்பினையும் [ஒழித்திட்
டாசகலும் அடியருளத் தப்பனுட னிருக்கும்
அன்னைஅருட் பாதமலர் சென்னி வைப்பாம். (2)

## இதன் தெளிபொருள்

சிவனுடைய எல்லாப் பொருளுமாய் இருப்பவள் உமையே.

அங்ஙனம் இருத்தலாவது, சிவனுடைய கருணை, இச்சை, ஞானம், ஆனந்தம், அருவமும் உருவமும் அருவுருவமும் ஆகிய திருமேனிகள், இலயமும் போகமும் அதிகாரமும் ஆகிய நிலைகள், வாழ்க்கைத் துணை, இடம், ஆடையும் அணிகலமும் படைக்கலமும் ஊர்தியும் பிறவுமாகிய உடைமைகள் ஆகிய எல்லாமாய் இருத்தல்.

(இவ்வாறு அவள் இருத்தலால் உண்டாகும் பயன் யாது எனின்,) எல்லா உயிர்களையும் பெற்று வளர்த்துப் பலவகையான நுகர்ச்சிகளை நுகரச்செய்து, பின் பிறப்பை நீக்கி தூய்மை பெறச் செய்து, அங்ஙனம் தூய்மை பெற்றுச் சிவனுக்கு அடியராந் தன்மை எய்திய அவர்களது அறிவில் அப்பனாகிய சிவனோடு அம்மையாய் இருந்தருளல்.

அவ்வாற்ருல் அனைத்துயிர்க்கும் தாயாம் அவளது அருளுரு வான திருவடிகளாகிய தாமரை மலர்களை எமது தலையில் பொருந்த வைத்துப் பணிவோம்.

## விளக்கம்

சிவனுடைய எல்லாப் பொருள்களும் உமையே என்றது, அவள் அவனது சத்தியாதல் பற்றியாம். இதனுனே உலகில் நிகழ்வன யாவும் அவனது சத்தியின் தொழிற்பாடுகளே என்பது விளங்கும்.

இலயம், சூக்கும (நுண்ணிய) நிலை. போகம், இடைப்பட்ட நிலை. அதிகாரம், தூல (பருத்த) நிலை. அருவம், கண்ணுக்குப் புலனுகாத வடிவம். அருவுருவம், புலன் ஆதலும், ஆகாமையும் உடைய வடிவம். உருவம், கண்ணுக்குப் புலனுகியே நிற்கும் வடிவம். இலயம் முதலிய மூன்றிலும் அருவம் முதலிய மூன்றும் முறையே உள்ளனவாம்.

தேசு - ஒளி. ஆசு - குற்றம்; மலம்.

## விநாயக வணக்கம்

அடுத்துச் சிவசத்திகளின் மூத்த பிள்ளையாராகிய விநாய கருக்கு வணக்கம் கூறுகின்ருர். தொடக்கத்தில் கூறியது காப்பு. அது விநாயகருக்கே உரிய தனிச்செய்யுள். இது கடவுள் வாழ்த் தில் கடவுளர் வரிசையில் வருவது.

4 இயம்பும்நூல் இருந்தமிழின் செய்யு ளாற்ருல்
இடையூறு தீர்ந்தினிது முடிய வேண்டித்
தயங்குபே ரொளியாகி எங்கும் நின்ற
தலைவனுர் மலைமாது தன்னுே டாடிப்
பயந்தஐங் கரம்நாற்ருேள் முக்கண் இரு பாதப்
பரியஒரு நீள்கோட்டுப் பெரிய பண்டிக்
கயந்தனடிக் கமலங்கள் நயந்து போற்றிக்
கருத்திலுற இருத்திமிகக் காதல் செய்வாம். (3)

## இதன் தெளிபொருள்

சிவபிரான் களிற்றியானை உருவும், உமா தேவி பிடி யானை உருவுமாகிக் கலந்து பெறப்பட்டவர் விநாயகர். அதனுல் அவர் (யானை முகம் உடையவராய்) 'யானை' என்றே சொல்லத்

தக்கவராய் உள்ளார். ஆயினும், யானையேயாய் நில்லாது ஐந்து கை, நான்கு தோள், மூன்று கண், இரண்டு பாதம், ஒரு கொம்பு, பெரிய வயிறு என்னும் இவைகளைக் கொண்டு சிலவற்றில் யானையின் வேறுபட்ட தேவ வடிவும், சிலவற்றில் தேவரின் வேறுபட்டு யானை வடிவோடு பூத வடிவும் உடைய வியத்தகும் உருவத்துடன் அவர் விளங்குகின்றார். அவரதுத்திருவடியாகிய தாமரை மலர்களை, இனிச் செய்யப்படுவதாகிய இந்நூல் இடையூறு நீங்கிச் சிறந்த தமிழ்ச் செய்யுளின் இயல்பிலே அமைந்து இனிது முற்றுப் பெறுதற் பொருட்டு, விரும்பி வாயால் துதித்து, மனத்தில் பொருந்த வைத்து நினைந்து அன்பை மிகுதியாகச் செய்வோம்.

## விளக்கம்

'தயங்கு பேரொளியாகி......கயந்தனடிக் கமலங்கள் இயம்பு நூல் இடையூறு தீர்ந்து இருந்தமிழின் செய்யுள் ஆற்றால் இனிது முடிய வேண்டி, நயந்து, போற்றி......செய்வாம்' எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க.

தயங்கு - விளங்குகின்ற. பேரொளி - வரையறைப் படாத ஒளி. "ஒளியாகி எங்கும் நின்ற" என்றது, 'சத்தி யுருவில் சருவ வியாபகராய் உள்ள' என்றவாறு. பின்னர்த் தலைவியை "மலை மாது" என்றலால், தலைவனார் சிவனாரே யாதல் பெறப் பட்டது. மலை, இமய மலை. மலைமாது, அம்மலையின்பால் தோன்றி வளர்ந்த பெண்டு. 'பார்ப்பதி' என்னும் வடசொற்கும் இதுவே பொருள்.

சிவபிரான் தான் களிற்றியானை உருவங்கொண்டு, தன் தேவியைப் பிடியானை உருவங்கொள்ளச் செய்து கூடி யானை முகக் கடவுளைப் பெற்றார் என்பது புராணங்களில் இனிது விளங்கி நிற்கும் செய்தியாதலின், "ஆடிப் பயந்த" எனக் குறிப்பாற் கூறிப்போயினார்.

காப்புச் செய்யுளில் "ஒரு கோடு" முதலாகக் கூறியது போல, இங்கு "ஐங்கரம்" முதலாக வைத்து அவ்வலங்காரமே படக் கூறினார், "காப்பிற் கூறப்பட்டவரே இவர்" என்றற்கு. பரிய - பருமையான. பண்டி - வயிறு. கயம் - யானை. "கோட்டன், செவியன்" முதலியனபோல இங்கு உயர்திணை ஆண்பாற் சொல்லாற் கூறாது, "கயம்" என்றே போயினமையால், இஃது உபசார வழக்கு. நயந்து - விரும்பி.

## முருகக் கடவுள் வணக்கம்

அடுத்து இளைய பிள்ளையாராகிய முருகருக்கு வணக்கம் கூறுகின்றார்.

5. அருமறை ஆகமம் அங்கம் அருங்கலைநூல் தெரிந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அருங்குருவாம் [குருளை
திருமறைமா முனிவர்முனி தேவர்கள்தம் தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர்தெய்வம்
பொருமறையார் கழல்வீரர் வீரன் கையில்
பூநீர்கொண் டோவாது போற்றும்அடி யவர்கள்
கருமறையா வகைஅருளிக் கதிவழங்கும் கந்தன்
கழல்இணைகள் எம்சிரத்தில் கருத்தில் வைப்பாம்.

## இதன் தெளி பொருள்

முருகன், ஆரிய மொழியில் உள்ள அரிய வேதம் முதலிய பல நூல்களையும் உணர்ந்திருந்த அகத்திய முனிவருக்குத் தமிழ் இலக்கணத்தை விரித்துரைத்து, ஞானத்தையும் உணர்த்திய ஞானகுரு; என்றும் இளைஞனாய் இருப்பவன்; முனிவர்க்கெல்லாம் தலையாய முனிவன்; தேவர்க்கெல்லாம் தலையாய தேவன்; சிவபெருமானது அருளே வடிவெடுத்துத் தோன்றிய குமாரன்; வீரர்கட்கெல்லாம் தலையாய வீரன்; பூவும் நீருங் கொண்டு நாளும் வழிபடும் அடியவர்கள் பிறவியிற் புகுதாதபடி காத்து விடுபேற்றை வழங்குபவன். அவனது வீரக் கழலை அணிந்த இரண்டு திருவடிகளையும் எமது தலைமேலும், உள்ளத்துள்ளும் பொருந்த வைப்போம்.

## விளக்கம்

அங்கம், வேதத்தின் துணை நூல்கள். அவை, 'சிட்சை, கற்பம் வியாகரணம், நிருத்தம், சோதிடம், சந்தோவிசிதி என ஆறு. அவற்றுள் சிட்சை, வேத மொழிகளின் ஒலி வேறுபாடுகளைத் தெரிப்பது. கற்பம், வேதத்திற் சொல்லப்படும் ஒழுக்கங்களை நடைமுறையிற் கொள்ளுமாற்றைக் கூறுவது. வியாகரணம், வேதத்தின் சொற்களுக்கு இலக்கணம் கூறுவது. நிருத்தம், வேதத்தின் சொல்லாக்கத்தை விளக்குவது. சோதிடம், வேதத்தில் சொல்லப்பட்ட ஒழுக்கங்கட்கு உரிய காலங்களை வரையறுத்துக் கூறுவது. சந்தோவிசிதி, வேதத்தின் சந்தங்களுக்கு எழுத்துக் கணக்குக் கூறுவது.

ஆகமம், சிவாகமம் அல்லது சைவாகமம், அவை, காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம், தீப்தம், சூட்சுமம், சகஸ்ரம், அம்சுமான், சுப்பிரபேதம், விஜயம், நிஸ்வாசம், சுவாயம்புவம், ஆக்கி னேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திர ஞானம், முக பிம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம் பாரமேசுரம், இரணம், வாதுளம் என இருபத்தெட்டு; இவை மூலாகமம். இவற்றைச் சார்ந்த உபாகமங்கள் இருநூற்றேழு உள்ளன. இவை, " சரியா பாதம், கிரியா பாதம், யோக பாதம், ஞான பாதம் " என நான்கு வகையாய் இருக்கும். முதல் மூன்றும் சைவ சமய ஒழுக லாறுகளைக் கூறுவன. ஞான பாதம், சைவ சமயத்தின் தத்துவக் கோட்பாடுகளைக் கூறுவது.

அருங்கலை என்றது, காந்தருவ வேதம் (இசை நூல்) ஆயுர் வேதம் (மருத்துவ நூல்) முதலியவை. " மறை, ஆகமம், கலை ஆகிய நூலைத் தெரிந்த அகத்தியன் " என்க.

வேதத்தையும், தமிழ் இலக்கணத்தையும் " ஒத்து " எனக் குறிப்பர். இங்கு வேதம் முதலிலே கூறப்பட்டமையால், பின்னர், " ஒத்து " என்றது தமிழிலக்கணமேயாயிற்று.

பொரும் அறை ஆர் கழல் வீரர் - காலில் தாக்கி ஒலித்தலைப் பொருந்திய கழல் அணிந்த அடியினை யுடைய வீரர்கள். கரு மறையாது - கருவினுள் புகாமல். " கழல்களாகிய இணை " என விகுதி பிரித்துக் கூட்டப்படும். இக் கழல் தானியாகுபெயர்.

## ஆசிரிய வணக்கம்

கடவுள் வாழ்த்துக் கூறிப் பின் தமக்குச் சிவஞானத்தைத் தந்தருளிய அருட்குரவராகிய மெய்கண்ட தேவரை வணங்குத லாகிய ஆசிரிய வணக்கம் ஒரு செய்யுளாற் கூறுகின்றார்.

6. பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
 பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவர்இ தயகமல முகைக ளெல்லாம்
 கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணை மேவும்
 மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
 பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம் (5)

## இதன் தெளிபொருள்

மெய்கண்டதேவர் ஞான சூரியன் ஆவார். அவர் இந் நிலவுலகில் வந்து உதயஞ் செய்தமையால், அவரைத் தரிசித்த வர்களுடைய நெஞ்சமாகிய தாமரை மலர்கள், போதாய் இருந்த நிலையினின்றும் நீங்கி (கட்டவிழ்ந்து) மலர்ந்தன. அம்மலரில் சிவபரம் பொருளாகிய நறுமணம் கமழாநின்றது. சிவஞான மாகிய பசியதேன் அம்மலரினின்றும் புறம்போந்து ஒழுகிற்று. அத்தேனை உண்ணப் பழைய வேதங்களை ஓதியுணர்ந்த உணர் வினராகிய வண்டுகள் அவ்வேத முழக்கமாகிய ஒலியைச்செய்து மொய்த்தன.

இத்தகைய பயனை யெல்லாம் தரவந்த ஞான சூரியனாகிய அவர் திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருப்பவர். சைவ ஆசிரியர்க்கெல்லாம் ஆசிரியர். தாமரை மலரும் தோற்கத் தக்க பொலிவுடனும், சிறப்புடனும் எமது தலையிலே எஞ்ஞான்றும் பொருந்தி நிற்கின்ற அவரது அழகிய திருவடிகளை யாம் எந் நேரமும் போற்றி செய்வோம்.

## விளக்கம்

மறைகள் தம்மை ஓதுவார் வழியாக அரற்றுதலைத் தாமே அரற்றுவனபோலக் கூறியது இலக்கணை. 'ஞானப் பசுந்தேன்' என மாற்றிக்கொள்க. அது புறம் போந்து ஒழுகுதல், சொல் வடிவாய் வெளிப்படுதல். எனவே அச்சொற்களைக் கேட்டுத் தெளிவுபெற வேண்டி, நூல் உணர்வுடையோர்புடை சூழ்ந்த தனர் என்க. இதனால் மெய்கண்ட தேவர்க்கு மாணுக்கராயினர் பிறர்க்கு ஆசிரியராதல் குறிக்கப்பட்டது.

மலர்தலை, 'கண் திறத்தல்' என்றதும் இலக்கணை. விண்ட - மலர்ந்த. வெண்ணை, 'வெண்ணெய் நல்லூர்' என்பதன் மரூஉ. 'வெண்ணெய்' எனின் அஃது ஊரைக் குறியாது; அதனால், அவ்வாறு ஓதுதல் பாடம் அன்று.

குரு சிவமே யாதலின் குரு வணக்கமும் கடவுள் வாழ்த்தே யாம்.

(தொடரும்)

# கௌமாரம்

ஸாஹித்யகர்த்தா, ஸம்ஸ்க்ருத விமர்சகர்
ஸ்ரீ. T. இராமலிங்க தீக்ஷிதர், M. A., M. Litt.

( மலர் 33, இதழ் 1, பக்கம் 16 இன் தொடர்ச்சி )

சிவனே முருகன் ; முருகனே சிவன் —

கந்தர் கலிவெண்பா :

" ஐந்து முகத்தோடு அதோமுகமும் தந்து
திருமுகங்கள் ஆறுகிச் செந்தழற்கண் ஆறும்,
ஒருமுகமாய்த் தீப்பொறி ஆறு உய்ப்ப— "

முருகன் ப்ரணவஸ்வருபன் : ஸர்வதேவதாஸ்வருபன்.

स्कान्दे —

'वेद एव मयूरः स्यात्प्रणवः षण्मुखस्तथा ।
ब्रह्मविद्यापि शक्तिस्यान्मोक्षस्तद्दर्शनात्स्मृतः ॥'

काञ्चीमाहात्म्ये कुमरकोष्ठवर्णने —

'अथवा सर्वयज्ञेषु सुब्रह्मण्योमिति क्रिया ।
अहं च मम पुत्रश्चाप्योङ्कारार्थौ श्रुतौ श्रुतेः ॥'

வேதம் மயில் வடிவிலும், ப்ரணவம் - ஸ்கந்தனிடமும், ப்ரஹ்ம வித்யா - சக்திவேலினிடத்திலும், அறியப்படுகிறது.

கச்சியப்ப சிவாசாரியார் கந்தபுராணத்தில் கூறுகிறார் :

" அருவமும் உருவமாகி, அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரமமாய் நின்ற சோதிப்பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்களாறும் கரங்கள்பன்னிரண்டும்கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகமுய்ய— "

திருமுருகனின் ஆறுமுகங்களின் அமைப்பில் உண்மைத் தத்துவம் பலவாறாக வர்ணிக்கப்பட்டுள்ளது.

பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபர்களான ப்ரஹ்மா, விஷ்ணு முதலான ஆறு தெய்வங்களின் குணங்களையும் ஆறுமுகக் கடவுளிடம் ஒருங்கே காண்கிறோம்: சிவன் - ஞானம்; விஷ்ணு - ஐச்வர்யம்; சக்தி - சத்தி; கணபதி - பலம்; குமாரர் - வீர்யம்; சூர்யன் - தேஜஸ். ஆகவே திருமுருகன் ஆறுமுகங்களைக் கொண்டு ஆறு சமயங்களின் தலைவனாக, ஆறுதலை அளிப்பவனாக, ஆறுபடை வீடுகளிலும் விளங்கிக்கொண்டு அருள்பாலிக்கின்றான்.

சிதம்பர சுவாமிகள் (திருப்போரூர் சந்நிதிமுறையில்)

"ஆறுசமயக் கடவுள் வேறுவேறின்றி
யான் ஒருவனே அங்கங்கு இருந்து
அன்பர்க்கு முத்திதரு வித்தென்று
யாவர்க்கும் அறிவித்த வதனமணியே."

தமது ஆறுமுகங்களில் மூலமந்திரமான "ஷடாக்ஷரத்தை" (சரவணபவ) உணர்த்துகின்றான்.

சிவனின் நெற்றிக்கண்ணிலிருந்து கிளம்பிய 6 தீப்பொறிகளின் வடிவில் உண்டாகிய குழந்தைகளை துர்கா, லக்ஷ்மி, சரஸ்வதி, ராதா, ஸாவித்ரி, புவனேச்வரி ஆகிய ஆறு சக்தி ஸ்வரூபைகளான கார்த்திகைப் பெண்கள் அறுவரும் வளர்த்து வரவே, பார்வதிதேவி ஆறு குழந்தைகளையும் ஒன்றாக்கி ஆறுமுகக் கடவுளாக அருளினாள்; ஆகவே 'ஸ்கந்தன்' எனப் பட்டார்.

கந்தபுராணம்:

"தாயென ஆரல்போந்து தனங்கொள் பாலருந்தலாலே
ஏயதோர் கார்த்திகேயன் என்றொரு தொல்பேர் பெற்றான்
சேயவன் வடிவமாறும் திரட்டி நீயொன்றாய்ச் செய்தாய்
ஆயதனாலே கந்தனா மெனு நாமம் பெற்றான்."

முருகன் ஆறுமுகங்களால் முறையே தமது ஞான ஒளியால் அறியாமையாகிய இருளைப் போக்குகின்றான்; பக்தர்களின் துயர் நீக்கிக் காக்கின்றான்; வேதங்களையும், யாகங்களையும் சம்ரக்ஷிக்கின்றான்; வேதாகமங்களைப் பிரகாசிக்கச் செய்கிறான்; கோபம்

முதலிய அரக்கர்களை வெல்கின்ருன். வள்ளியை மணமுடித்து இன்புற்று உலகை உய்விக்கின்ருன்.

நக்கீரர் திருமுருகாற்றுப்படையில்,

“மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரித்தன்று ஒருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலின் வந்து வரங்கொடுத்தன்றே; ஒருமுகம்
மந்திரவிதியின் மரபுளி வழா அது
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுறநாடித்
திங்கள்போலத் திசை விளக்கும்மே; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமமுருக்கிக்
கறுவு கொள்நெஞ்சமொடு களம்வேட்டன்றே; ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே”

கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, மேல்திசை, கீழ்த்திசை ஆகிய ஆறு திசைகளின் அதிபனுய் ஆறுமுகன் விளங்குகிருன். திருத்தணி, திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், பழனி, பழமுதிர் சோலை, ஸ்வாமிமலை ஆகிய ஆறுபடை வீடுகளில் காட்சியளிக்கின்ருன்.

உள்ளத்தில் உள்ள அலைபோன்ற அறுவகைத் துயரங்கள், (சோகம், மோஹம், பசி, தாகம், ஜன்ம, ம்ருத்யு) - சரீரத்தில் உண்டாகும் ஆறுவித மாறுதல்கள் - (பிறத்தல், இருத்தல், வளர்தல், உருமாறுதல், குறைதல், நாசம் அடைதல்) - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சர்யம் போன்ற ஆறு விரோதிகள் ஆகியவற்றை அழிப்பதற்காகவே திருமுருகன் ஆறுமுகங்களுடன் ஷண்முகராக விளங்குவதாகச் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதீஸ்வாமிகள் “ஸ்ரீ ஷண்முக புஜங்க ஸ்துதி”யில் குறிப்பிடுகிருர்.

‘शरीरेन्द्रियादावहंभाव जातान्
षडूर्मीविकारांश्च शत्रून्निहन्तुम् ।
नतानां दधे यस्तमास्याब्जषट्कं
सदा षण्मुखं भावये हृत्सरोजे ॥’

மேலும் தமது ஸ்ரீ சரவணபவ மானஸபூஜா ஸ்துதியில் “குஹ” என்கிற பெயரின் உண்மையை விளக்குகின்ருர்:

'கு' என்பது உள்ளத்தில் உறைந்திருக்கும் நீக்கமுடியாத அறியாமையாகிற இருள் எனவும் - 'ஹ' என்பது அவற்றைப் போக்கும் தன்மையை உடைய கடவுள் எனவும் "குஹன்" என்ற பெயரால் போதிக்கின்ருர் :

' गुकारो ह्याख्याति प्रबलमनिवार्यं किल तमो -
हकारो हानिं च प्रथयतितरामेव जगति ।
अतो मोहाद्यत्वं शिथिलयति यन्नाम गुह
इत्यमुं देवं ध्यायाम्यभिलाषितसन्मानिपुणम् ॥ '

குமரன், குமாரன் என்பதால் ஆணவம், கன்மம், மாயை என்கிற மும்மலங்களை அழிப்பவனுகவும், பூமியில் மோக்ஷத்தை அளிப்பவனுகவும் முருகன் விளங்குகிருன் :

கு - அசுத்தம். மாரன் - அழிப்பவன்.

कु - पृथिव्यां, मां - मोनलक्ष्मीं । राति - ददातीति कुमारः ।

முருகன் என்ற பெயரால் மும்மூர்த்தி ஸ்வரூபன் என்பதை விளக்குகின்ருன் : மு - முகுந்தன் - ரு - ருத்ரன் - கு - பிரமன்.

அமுதவல்லி - சுந்தரவல்லி என்ற பெயர்களில்; முருகனின் இரு மனைவிகளும் ஆதியில் விஷ்ணுவின் பெண்கள்.

| | |
|---|---|
| பிறகு ஸ்ரீவள்ளி | . இச்சாசக்தி ஸ்வரூபை |
| ஸ்ரீ தேவஸேனை | - க்ரியா சக்தி |
| சக்திவேல் | - ஞானசக்தி. |

மூன்று முக்ய அசுரர்கள் :

| | |
|---|---|
| சூரபத்மன் | - அஹம்பாவத்தின் உருவம் |
| சிங்கமுகாசுரன் | - மாயை |
| தாரகாசுரன் | - பேராசை. |

ஆறுமுகக் கடவுள் அங்காரக (செவ்வாய்) க்ரஹ அதிபன். ஆகவே புள்ளிருக்குவேளூர் எனப்படும் வைத்தீசுவரன்கோயி வில் அங்காரகன் தனியாக விளங்கியும், செல்வமுத்துக்குமார சுவாமிக் கடவுளுடனும் அருள்பாலிப்பதையும் காண்கிருேம்.

முருகனை வழிபடுவதற்கு உகந்த நாட்கள் : செவ்வாய்க் கிழமை; ஷஷ்டி திதி - சூரபத்ம சம்ஹார நாள்; விசாகம் - முருகன் ஜன்மநட்சத்திரம்; கிருத்திகை - கார்த்திகைப்பெண்

களால் வளர்த்தமைக்கு; முருகன் தலங்களில் வைகாசி விசாகப் பெருவிழா நடைபெறுவதைக் காண்கிறோம். முருக வழிபாட்டின் விரிவினைக்கந்தபுராணத்திலும், குமாரதந்திரத்திலும்காணலாம்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கத்தில் முருகனின் திருநாமங்களைக் கூறிவிட்டு, முருகபக்தியின் இன்றியமையாமையையும் குறிப்பிட்டுள்ளார்:

'कुमारेशसूनो गुह स्कन्दसेना-
पते शक्तिपाणे मयूराधिरूढ।
पुलिन्दात्मजाकान्त भक्तार्तिहारिन्
प्रभो तारकारे सदा रक्ष मां त्वम्॥
हशि स्कन्दमूर्तिर्श्रुतौ स्कन्दकीर्ति-
र्मुखे मे पवित्रं सदा तच्चरित्रम्।
करे तस्य कृत्यं वपुस्तस्य भृत्यं
गुहे सन्तु लीना ममाशेषभावाः॥'

வடலூர் இராமலிங்கசுவாமிகள் திருவருட்பாவில் (14 தெய்வமணி மாலையில்) முருகனின் விபூதியை வர்ணிக்கின்றார்:

"எத்திக்கு மென்னுளந் தித்திக்கு மின்பமே
என்னுயிர்க் குயிராகு மோர்
ஏகமே ஆனந்த போகமே யோகமே
என்பெருஞ் செல்வமே நன்
முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே முடிவிலாத
முருகனே நெடியமால் மருகனே சிவபிரான்
முத்தாடும் அருமை மகனே
பத்திக்கு உவந்து அருள் பரிந்தருளும் நின்னடிப்
பற்றருளி என்னை யிந்தப்
படியிலே யுழல்கின்ற குடியிலே ஒருவனாய்ப்
பண்ணும லாண்டருளு வாய்
சத்திக்கு நீர்ச்சென்னைக் கந்தகோட் டத்துவளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே."

நாமும் முறைப்படி திருமுருகனை வழிபட்டு அவனருள் பெற்று இன்புறுவோமாக.

ஓம் சரவணபவ சரணம்.

சிவுதருமோத்தரக் கட்டுரை எண் 20.

# துன்பங்களும் - துடைக்கும் வழியும்

தருமையாதீனப்புலவர், மகாவித்துவான்

திரு. ச. தண்டபாணி தேசிகர்

( மலர் 33, இதழ் 1. பக்கம் 43 இன் தொடர்ச்சி )

## சரீரத்தின் தன்மை :-

பித்தம் உழக்கு ; கபம் உரி; வாதம் நாழுழி ; நிணம் 20 பலம் ; செந்நீர் 10 பலம் ; என்பு 360 பலம் ; பித்தவுருவான மேதை 10 பலம் ; ஊன் 500 பலம் ; இறுகு உதிரமாகிய கட்டி இரத்தம் 3 பலம் ; உருகிய உதிரம் 100 பலம் ; மூளை 6 பலம் ; விரியமாகிய சுக்கிலம் ஆழாக்கு. இவையனைத்துடன் நகம் மயிர் எலும்பு அனைத்தும் சேர்ந்து உடலின் நிறை 1000 பலம். மலத்திற்கும் நீருக்கும் எடையில்லை.

இங்ஙனம் ஆய உடலை, புழுத்த உடலை, நீர்மேல் எழுத்துப் போல நிலையற்றதை, அறிவிலிகள் நிலையானதென்று கருதும் இதனை, ஞானிகள் ஒருபோதும் நிலையானதென்று எண்ண மாட்டார்கள்.

இங்ஙனமாய உடலின் அருவருக்கத்தக்க தன்மையையறிந்திருந்தும் மூடன் ஒருபோதும் இதனிழிவையுணரான். சொன்னாலும் அறியான்.

உலகத்தில் மலமிருக்கும் பாண்டம் தங்கத்தாலாயதென்றாலும் அதனை அருவருத்து யாரும் தீண்டமாட்டார்கள். அப்படியிருந்தும் மலமிருக்கும் பாண்டமாகிய இந்த உடலை மட்டும் வெறுக்காதிருக்கிறார்களே ; என்னே அறியாமை !

## அகத்தூய்மை — புறத்தூய்மைகள் :-

இந்தப் பாழுடலம் அமிர்தத்தையே உண்டாலும் அதனை மலமாக்கிவிடும் தூய நீரில் குளித்தாலும் உடல் புனிதமாமோ? கருப்புக் கம்பளியை வெள்ளையாக்க யாரால் முடியும்? அதுபோ

லத்தான் இந்த வுடலைப் புனிதமாக்கும் செயல். காராவின் பாலைச் சொரிந்தாலும் உடலின் அசுத்தம் போகுமோ? போகாது; போகாது.

இத்தகைய உடலிற் குடியிருக்கும் ஆன்மாவைச் சுத்தம் பண்ண ஒரே ஒரு வழிதானுண்டு. அது ஞானசாரியனுடைய மனங்கனிந்த அருளுபதேசம்தான். அவன் உபதேசத்தைத் துணைக்கொண்டு மன உறுதி பூண்டு, உறவு பகை ஆசைகளை ஒழித்து, சிவனது திருவடித் தாமரையிலே தம்முயிரை ஐக்கியம் பண்ணியிருந்தால் ஆன்மசுத்தி யுண்டாகும்.

ஞானிகள் நம்மோடெல்லாம் பழகினாலும் அவர்கள் உள்ளம் சிவனடியிலே இருக்கும். ஒருவன் தன்மனைவியைத் தழுவிமோக முறுகிறான். அவனே தன்மகளை அணைக்கும்போது வாத்ஸல்யம் தோன்றுமேயன்றிக் காமமாகிய மோகம் தோன்றுவதில்லை. அது போல முன் பிறவியிற் செய்த புண்ணியபாவப் பயனால் பக்குவப் பட்டுவந்த கன்மங்களை நுகரும்போது 'யாம் யோசிக்கிறோம்' என்ற முனைப்புத் தோன்றினால் ஆகாமிய வினை தோன்றிக் கொண்டேயிருக்கும். விருப்பின்றி முனைப்படங்கி நுகர்ந்தால் ஆகாமிய வினை யில்லை.

வினைகெடுப்பார், குழந்தை தனத்தை வருட உளங்குழைந்து பால்சுரக்கும் பரிவுடன் கூடிய தாய்போன்றவர்கள்.

வினை விளைப்பவர்கள் கணவன் தனத்தை வருட, அவனைக் கூடுதற்குப் பரபரக்கின்ற காதலியைப்போன்றவர்கள். யாருக்கு அகத்தூய்மையும் புறத்தூய்மையும் அமைகிறதோ அவனே ஞானி; அவனாலேயே பிறப்பிறப்புக்களை வெல்ல இயலும். அகத்தூய்மை யில்லாமல் மனம் இங்கும் அங்குமாக அலைய எத்தனை தரம் காசிக்குப் போனாலும் கங்கையாடினாலும், மலையத்தனை மண்ணைக் கொண்டு உடலைத் தேய்த்துத் தேய்த்துக் கழுவினாலும் அவர் களைப் பிடித்த பாவம் தொலையாது. உடலும் தூய்மையாகாது. கங்கையாடினால் புண்ணியம் என்கிறார்களே எனின்? ஆம் புண்ணியம் உண்டு. அது அற்பத்திலற்பம். அகத்தூய்மை யுடையார்க்கே பேரின்பம் உண்டாம்.

அகத்தூய்மையின்றிக் காமநோய் கருத்தைத் தீய்க்கக் காரிகையரைக்கூடி இன்பம் என்று எத்தனையோ அனுபவிக் கின்றார்களே அது பெருவியாதிக்காரன் உடலிலே சீழும் மேக நீரும் குத்த வலிதாங்காமல் தீயிற்காய்ச்சும்போது எவ்வளவு சுகம் என்று கருதுகிறானோ அவ்வளவுதான் மாதர் சுகமும்.

பன்றி, மலத்தை முகரும்போது என்ன இன்பத்தை நுகர்கிறதோ அத்தகைய இன்பந்தான் மாதரால் பெறும் இன்பம்.

நாயும், பேய்யும், நரியும், கழுகும், ஈயும், எறும்பும் பிணத்தை யினிது எனத் தின்கின்றன. அதுபோலத்தான், உயிர்ப் பிணமாகிய மாதரை நாம் சுகிப்பது. இதனுல் ஒருபோதும் நிலையான இன்பங் கிட்டாது. எவனெருவன் பரமஞானியாம் வாக்கு மனுதீதப்பரம்பொருளாகிய தேவதேவனருளால் சித்சக்தி யனுபவத்தையடைகிருனே அவனே நிலைபெருன இன்பத்தை எய்தியவன்.

இங்ஙனம் சிவபெருமான் திருவடிக்கன்பு செய்யாமலும் சிவனடியார்களையும் குருவையும் வணங்காமலும் போற்ருமலும் பாவங்களையே செய்துழல்கின்ருனே அவன் எரிவாய் நரகத் துக்கு ஆளாவான்.

பிரமன் பெற்ற பெண்ணை விரும்பினுன்; இந்திரன் கௌதமர்மனைவி யகலிகையைக் காதலித்தான்; நளன் மனைவி தமயந்தியை, வேடன் விரும்பினுன்; இராவணன் சீதையைக் காதலித்தான். இவர்கள் அடைந்த பயன் என்ன? கற்பரசிகள் இட்ட சாபத்தால் மடிந்தது தானே!

தேவேந்திரன் நளாயினியை விரும்பி, அவளைக் கைலைக்கு அழைத்துச்சென்று ஆனந்த நடனம் புரியும் ஆடல் வல்லானை நினைக்கமாட்டாமல் அவளை எண்ணி எண்ணி நைந்து அவளை வற்புறுத்த அவள் இசையாமையால் வச்சிராயுதத்தை ஓங்கி வெட்ட முற்பட்டான். அப்போது ஆடுகின்ற இறைவன் சிறிது சினத்தோடு இந்திரனைப் பார்த்தார். வாதநோய் பிடித்து ஓங்கியகை ஓங்கியபடியே நின்றுவிட்டது.

சந்திரன் குருபன்னியை விரும்பி க்ஷயரோகத்தால் வருந்தினன். சனி பகவான் தன் சிறிய தாயாகிய பிரதி உஷா தேவியை உதைக்கக் கால் நொண்டியானுன். மற்றவர்களில் இப்படிப் பெண்களால் நோயுருதார்கள் யார்?

தட்சனுக்குக் காய்ச்சலும், திருமாலுக்குத் தலைவலியும், வருணனுக்கு நீர்க்கோர்வையும், சூரியனுக்கு உடல் ஒளி மழுங்கி படர் ரோகமும் மன்மதன் உடலே வெந்து சாம்பரானதும் பிரமனுக்குத் தலைபோனதும், கலைமகள் மூக்கரிபட்டதும், எல்லாம் எதனுல் விளைந்தன? சிவபெருமான் சிறிது சினங் கொண்டதாலன்ருே!

யமன் இறந்ததும், திரிபுராரிகள் செத்ததும், திருமால் தலை யரியப்பட்டதும், ஆதிவராகத்தின் கொம்பு முறிக்கப்பட்டதும், தக்கன் தலையிழந்ததும், சூரியன் பல்லுடைந்ததும், சூரியன் தேர்ப்பாகனாகிய அருணன் மூக்கிழந்ததும், அக்கினி கையிழந் ததும், தேவர்கள் துயரமிகுந்து ஓடிப்போனதும் சிவபெருமா னுடைய சீற்றத்தாலன்றோ !

தாருகாசுரன் காளியால் வெட்டப்பட்டதும், சூரன் எமது வேற்படையால் கொல்லப்பெற்றதும், அசுரப்படையழிந்ததும் அருச்சுனன் நிவாதகவச காலகேயரைக் கொன்றதும், நகுடன் பாம்பானதும், பரசுராமன் இராமன் வலிக்குத் தோற்றதும், வாணாசுரன் கையிழந்ததும், கிருஷ்ணன் வேடன் அம்புபட்டிறந் ததும், சராசந்தன் வீமனாலிறந்ததும், ஆதிசேடன் வாயுதேவனால் வலியிழந்து படங்கிழிக்கப்பெற்றதும், அனுமன் சூரியனுக்குத் தோற்று ஓடினதும், சூரியன் மேகத்தினாலே மறைபட்டதும், மேகம் காற்றாற் சிதறடிக்கப்படுவதும், ஆகிய அனைத்தும் சிவபெருமானுடைய திருவருளை நினையாமையானும், அவனருள் செலுத்தாமையாலும் உயிர்கட்கு விளைந்த ஊறுகளன்றோ !

அகத்திய முனிவரே ! காலவரையறை கூறுவேம் கேள்.

| | | | |
|---|---|---|---|
| மனித ஆண்டு | 360 | — | 1 தேவயாண்டு: |
| தேவயாண்டு | 1200 | — | கலியுகம் |
| ,, | 2400 | — | துவாபரயுகம் |
| ,, | 3600 | — | திரேதாயுகம் |
| ,, | 4800 | — | கிரேதாயுகம் |

இங்ஙனம் தேவர்யாண்டு பன்னிரண்டாயிரம் கொண்டது ஒருசதுர்யுகம்; சதுர்யுகம் இரண்டாயிரம் கொண்டது பிரமா வுக்கு ஒருநாள். இந்த ஒருநாளிலே தேவர்களும் அட்டதிக்குப் பாலகர்களும் சந்திர சூரியர்கள் அனைவரும் வலிமை குன்றி ருத்திரனால் அழிக்கப்படுவார்கள். இப்படிப் பரார்த்தகாலம் இரண்டு கழிந்தபின் பிரமாவும் அழிவன். பரார்த்தம் என்பது பிரமகற்பத்தின் அரைப்பகுதியான கால அளவு.

இங்ஙனம் பிரமன் முதலிய தேவர்களே அழிய மக்கள் தம் அறியாமையாற் சிவனருளைப் பெற்றுச் சிவகதி சேராமல் உழல் கின்றார்களே ! என்னே மடைமை !

மக்கள் படுந்துன்பங்களைச் சொல்கிறோம் கேள் !

தாய்வயிற்றில் தங்கியிருக்கும்போது எவ்வளவு துன்பம்? பிறக்கிறபோது என்ன! பிறந்து வளர்ந்தபின் தாய் தந்தை குரு இவர்கள் கோபிக்குங்கால் துன்பம்! இத்தனைத் துன்பத்தையும் இடைவிடாது நுகரும் மக்களுக்கு ஞானம் இல்லையா! சிவஞானியர்களிடம் சிவஞானோபதேசம் கேட்டுத் தெளிந்து நாமும் பேரின்பம் எய்த வேண்டும் என்ற ஆசையால் சரியையாதி நால்வகை நெறிகளின் நின்று நற்கதியடையவேண்டிய மக்கள், புத்தியின்றி மனைவி மக்கள் தாய் தந்தை சுற்றம் என்று மேலும் மேலும் வாஞ்சையை வைத்துப் பெரிய லாபத்தைப் பிரிவிக்கின்றார்களே! ஐயோ பாவம், வாமமேகலையாரால் இவர்கள்படுந் துன்பத்திற்கு எல்லையுண்டோ! மலைகெல்லி எலியையா பிடிக்கவேண்டும். இத்தனைத் துன்பங்களையும் அடைந்து அடையும்பயன் ஒரு கணப்போதும் இல்லாத இந்த சிற்றின்பந்தானு! எண்ணிப் பார்க்கவேண்டாமா?

ஒரு எலும்புத்துண்டுக்கு இரண்டு நாய்கள் அடித்துக் கொள்வதுபோல புழுத்துக் குருதியும் சீயும் காமநீரும் சொரிகின்ற புண்ணுடலுக்காக அடித்துக்கொள்கிறார்களே! எள்ளளவு இன்பத்தை விரும்பி மலையத்தனை துன்பத்தை யனுபவிக்க வேண்டுமா? துலைக்கணக்கை அறியாத இவர்கள் கலைக் கணக்கையா ஆராயப் போகின்றார்கள்.

ஐயோ! மக்கள் அடைவது எப்போதும் துன்பமே! மார்கழி தையில் முன்பனித்துன்பம்; மாசி பங்குனியில் பின்பனித் துன்பம். சித்திரை வைகாசியில் வெயில் கொடுமை. ஆனி ஆடியில் முதுவேனிற்றுன்பம். ஆவணி புரட்டாசியில் மழைத் துன்பம். ஐப்பசி கார்த்திகை கூதிர்காற்றுத் துன்பம். இப்படி எல்லாப் பருவத்திலும் இவர்கள் எய்துவது துன்பந்தான்.

ஒருநாளைக்குள்ளே பாருங்கள்! காலையில் மலங்கழிக்கத் துன்பம். உச்சியிலே பசித்துன்பம். மாலையில் காமத்தால் துன்பம். இதனடுவிலே வேலைகளால் துன்பம்.

இத்தகைய துன்பங்களுக்குறைவிடமான இந்த உடலைச் சதம்என்று எண்ணிப் பணந்தேடப்படுகின்ற பாடோ சொல்ல இயலாது. தேடிவிட்டாலோ திருடர்களிடம் பயம். செலவழிக்கப் பயம். இன்பம் நுகரப்பயம், இதிலும் எல்லாவற்றிலும் பயம்.

இப்படியெல்லாம் துன்பப்பட்டுச் செல்வத்தைத் தேடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். இவன் உண்பது நாழிதானே! உடுப்பது நான்கு முழந்தானே! அரசன் இருக்கிறானே அவன்

மாடகூடங்களைக் கட்டுகிறான். அவன் படுக்கிற இடம் இருக்கிற இடம் அவன் கையால் எட்டுச்சாண் அளவு தானே. தனக் குரியனபோக மிச்சமாக யார் தேடினாலும் எப்படித் தேடினாலும் அது பாவந்தான் !

அரசனிருக்கிறான்; இவ்வளவு நாட்டைக் கட்டியாளுகிறான். அவனுக்கும் என்ன? எந்தச் சமயத்தில் என் பிள்ளையே என்னைக் கொன்று இந்த அரசைக் கைப்பற்றிவிடுமோ என்ற அச்சந்தான்.

எந்தக் கணத்தில் அயல் நாட்டரசன் படையெடுத்து வந்து பறித்துக்கொள்வானோ என்ற பயந்தான். இவர்கள் கதி யிப்படிக்கிடக்கட்டும். மாடு, கன்று, புலி, கரடி, பறவை, பாம்பு மீன், ஆமை, மரங்களாகத் தோன்றிய உயிர்களின் கதி என்ன?

யானைகள் பாகனாலும் அங்குசத்தாலும் துன்பமுறும். குதிரைக்குச் சவுக்கு தார் இவற்றால் துன்பம். ஒட்டகம் எருது களுக்குப் பாரம்; இவையல்லாமல் பகைவரால் வெட்டுக் குத்து வாங்கியிறக்கும். காட்டு விலங்குகளோ வேடர்களாலும் ஒன்றை யொன்று அடித்துக்கொண்டும் இறக்கும்; மழையில்லாமை புல் இல்லாமை இவைகளாலும் துன்புறும். பறவைகளோ வலையிற் பட்டும், வில்லம்புபட்டும், வெயில், காற்று இவைகளாலும் இறக்கும். மக்களோ பேராசையால் ஒருவரையொருவர் வருத்தி வாழ்வதாக எண்ணி அழிவைத் தேடிக்கொள்கிறார்கள்.

இவ்வண்ணம் பிறந்தவுயிர்கள் அனைத்தும் எய்துவது பெருந்துன்பமே. துன்பமே கலவாத தூய இன்பத்தையடைய வேண்டுமானால் இறைவனை எண்ண வேண்டும். இறைவனை எண்ண, குருவின் அருளுபதேசம் வேண்டும் அவன் உவந் துபதேசம் செய்ய எந்தவகையிலும் குருத்துரோகச் செயல்களில் ஈடுபடக்கூடாது. நல்லன சிந்திக்க ஞானம் பிறக்கும்.

---

(செனன மரணவியல் 27 முதல் 78 ஆம் பாடல் முடிய உள்ள கருத்து)

(தொடரும்)

# சிவாகம ஸார ஸர்வஸ்வம்

சிவாகம வித்துவான், சிவாகமரத்னுகரம்

**சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார்**

(மலர் 33. இதழ் 1. பக்கம் 32 இன் தொடர்ச்சி)

பூமியின்கண் நான்குபக்கமுமோடிய வேரினுடைய பலத்தினுலேதான் விருக்ஷம் நன்ருக சாகோபசாகையாக வளர்கின்றது. அதுபோல, முன்செய்த புண்ணிய பாப கரும பலத்தினுல் பிராமணன் முதலிய தேகமும் நன்ருக இந்திரிய வல்லமையும்நிச்சயமான ஆயுளும் போகம் முதலானவையும் வளருமென்பதுகருத்து.

"கலாதிஸாரம்" காலம் முதலான தத்துவங்களே உறுதியான வைரமென்னுமிடத்தில் ராகதத்துவம் பிசின், புருட தத்துவம் ஜீவன், பிரகிருதி முதலானவை ஸ்தூலசரீரம் என்று கொள்க

மரமானது வித்திலுதித்து வளர்ந்து அழிவதுபோல சரீரமானது மாயையிலுதித்து வளர்ந்தழிகின்றமையால் விருக்ஷ திருஷ்டாந்தம் சொல்லப்பட்டது.

"தந்மாத்ரேந்திரிய சாகோபசாகம்" சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற தன்மாத்திரைகளும், ஞானேந்திரியங்களான சுரோத்ரம், த்வக், சக்ஷு, ஜிஹ்வை, க்ராணம் என்பனவும், கர்மேந்திரியங்களானவாக்கு பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்பனவும் கிளைகளாகவும் உபக்கிளைகளாகவும் இருக்கின்றன.

"விஷயாலோசனபல்லவம்" ரூபம், சப்தம், கந்தம், ரஸம், ஸ்பர்சம் என்ற இவைகளுக்கு விஷயம் என்று பெயர். இவைகளின் க்ரஹண ரூபமான செய்கைகளே பல்லவங்கள். (தளிர்கள்)

"பாவப்ரபஞ்சகுசுமம்" தருமம், ஞானம், வைராக்யம், ஐச்வர்யம், என்ற நான்கும்; அதர்மம், அக்ஞானம், அவை

ராக்யம், அனைச்வர்யம் என்ற நான்கும்; ஆக எட்டும் பாவம் என்று பெயர். இதனுடைய கூட்டம் 300 ஆகும், இவைகளே புஷ்பங்கள்.

धर्मा दशभिर्मेदै र्ज्ञानमशीत्या शतेन वैराग्यम् ।
ऐश्वर्यं चतुष्षष्ट्या दशभिरधर्मस्तदर्घतोऽज्ञानम् ॥
अवैराग्यं च दशभिरनैश्वर्यं भिन्नमेकविंशत्या ।
भावप्रत्ययभेद च्छतत्रयेणायम् ॥ — रामकण्ठः

தருமம் 10 பேதமுடையது. ஞானம் 80 பேதமுடையது. வைராக்யம் 100 பேதமுடையது. ஐச்வர்யம் 64 பேதமுடையது. இதுபோல் அதர்மம் 10 பேதமுடையது. அஞ்ஞானம் 5 பேதமுடையது. அவைராக்யம் 10 பேதமுடையது. அனைச்வர்யம் 21 பேதமுடையது. ஆக 300 பேதமுடையது பாவாஷ்டகமாகும். — ராமகண்டர்.

"புத்யத்வசாய சங்கல்ப பலம்" புத்தி தத்துவத்தின் அத்யவசாயம்; அதாவது (இது வெள்ளி சுக்தி இல்லை என்ற நிச்சய புத்தி) இதுவே பலம், "புருஷவிஹங்கோப போக்யம்" புருஷனுக பரவையினுல் புஜிக்கப்படுவது. போக்த்ருஸ்வரூபமான புருஷனுகிய பரவை அவனுல் புஜிக்கப் படுகிறது என்று பொருள்.

"விஷயரஸம்" அதாவது (போக்ய போக்ருத்வரஸம்) போக்யம் சரீரம் போக்தா, ஆத்மா இவைகளின் சேர்க்கையானது ரஸம்.

"ஊர்த்துவமூலம் அதச்சாகம்" மேலேயுள்ள வேருடனும் கீழேயுள்ள கிளையுடனும் கூடிய ஆலமர வடிவமாகத் தனதுசரீரத்தை எண்ணுக.

இதன்பிறகு பிருதிவி முதலியவைகளின் பஞ்சகுணுதிகள் ஒழியும்பொருட்டு அந்தப் பிருதிவி முதலியவைகளின் பீஜங்களான ல - வ - ர - ய - ஹ என்ற அக்ஷரங்களை முறையே ஹ்ருதயம் சிரசு சிகை கவசம் முதலிய மந்திரங்களுடன் கூட்டி உச்சரித்து சரீரவிருக்ஷத்தின் பத்திர புஷ்பம் முதலியவைகள் நீங்கினதாகச் சிந்திக்கவேண்டும். அதாவது:- (இது பிராணயாமத்தை முக்கியமாகக் கொண்டே செய்யவேண்டும்.)

பூரகத்தின் முற்பாதியால் பிருதிவியின் பஞ்சகுணங்களழியும் பொருட்டு நிவிருத்தி கலாபீஜத்தை ஐந்துமுறை உச்சரித்து ஸ்தூல பத்திராதிகள் நீங்கினதாக சரீர விருக்ஷத்தை சிந்தித்து, பூரகத்தின் பிற்பாதியால் ஜலத்தின் நாலு குணங்களழியும் பொருட்டுப் பிரதிஷ்டாகலாபீஜத்தை நாலு முறை உச்சரித்து சூக்ஷ்ம பத்ராதிகள் நீங்கினதாகச் சிந்திக்க வேண்டும். பின்பு கும்பகத்தின் முற்பாதியால் அக்னியின் மூன்று குணமழியும் பொருட்டு வித்யாகலாபீஜத்தை மூன்றுதரமுச்சரித்து சோஷித்ததாக நினைத்து பிற்பாதியால் வலதுகால் கட்டைவிரலிலுண்டாகிய காலாக்னியால் தஹிக்கப்பட்டதாய் நீறுபோலானதாய்ச்சிந்திக்கவேண்டும் பிறகு ரேசகத்தின்முற்பாதியால் வாயுவின் குணமிரண்டுமழியும்பொருட்டு சாந்திகலா பீஜத்தை யிரண்டுமுறை உச்சரித்து பஸ்மமாய் பத்து திக்கிலும் பறந்து போனதாகப் பாவித்து ரேசகத்தின் பிற்பாதியால் ஆகாசத்தின் குணமொன்றுமழியும் பொருட்டு சாந்தியதீத கலாபீஜத்தை யொருமுறை உச்சரித்து சுத்தமானபடிகம் போல் நிர்மலமாக ஆகாசத்தைப் பாவிக்கவேண்டும்.

பின்பு துவாதசாந்தத்தில் சந்திரமண்டலத்தைப் பூர்ண சந்திரனுக்கொப்பாய் அமிருதமயமாயிருப்பதாய் நினைத்து பிராசாத மந்திரத்தோடு வௌஷடந்தமான சத்திமந்திரத்தைச் சொல்லியதனல் ரேசகத்தால் சிருஷ்டிமார்க்கமாகப் பெருகி சகலநாடி முகங்களிலும் பிரவேசித்த மிகுந்த அமிருத தாரைகளினுல் சரீரத்தை யுள்ளும் புறம்பும் அபிஷேகஞ் செய்யப்பட்டதாகத் தியானித்து மூலப்பிரமாங்க மந்திரங்களினுலும் முப்பத்தாறு கலைகளாலும் நியாஸஞ் செய்யப்பட்ட தேஹமுள்ளவனுய் இருதயகமலத்தில் மானசிகமாக சிவபூஜை செய்ய வேண்டும். — சித்தாந்தசாராவளி.

மானசிகபூஜை செய்யும்முன் நியாஸம் செய்துகொள்ள வேண்டும். அந்த நியாஸம் என்பது சாமான்யம் என்றும் விசேஷம் என்றும் இரண்டுவிதம். அதனுள் சாமான்யம், ஸ்ருஷ்டி, நியாஸம், ஸ்திதிநியாஸம் சம்ஹாரநியாஸம் என்று மூன்றுவிதம். விசேஷ நியாஸமும்மூன்றுவிதம் அஷ்டத்ரிம்சத்கலா நியாஸம் முதலியன. சசக்த்திகம், விசக்திகம், கேவலம் என்று ஈசானஸ்ஸர்வவித்யானும் சசிந்யை நம: என்பது முதலானது ஸசக்திகம், சசிந்யை நம: என்பது முதலானது கேவலம் ஈசானஸ்ஸர்வவித்யாநாம் நம: என்பது போன்றது விசக்த்திகம். — சிவபூஜாஸ்தவம்.

ஈசானகலை 5, தத்புருஷகலை 4, அகோரகலை 8 வாமதேவ கலை 13. சத்யோஜாதகலை 8 ஆக கலைகள் 38. ஆகவே இதற்கு அஷ்டத்ரிம்சத் கலாநியாஸம் என்பது பெயர்.

தத்புருஷகலை நான்கு; ஆகையால் ஊர்த்துவமுகம் தவிர நான்குமுகங்களுக்கும் சொல்லப்பட்டன. அப்படியே அவ்யக்த கலாயை நம: என்று ஊர்த்துவமுகத்தில் நியாஸம் செய்ய வேண்டும் என்று அகோர சிவாசாரியார் சொல்லியிருக்கிறார்.

அந்தர்யாகம் :

ज्योतिर्लिङ्गं हृदिस्थं यत्तदेवाभ्यर्च्यते बहिः ।
यतस्तस्मात्पुराकुर्यादन्तर्याग मिहोच्यते ॥

பாஹ்யபூஜை செய்தபோதிலும் ஆந்தரபூஜை முன்னம் செய்தல் வேண்டும். இருதயத்திலிருக்கும் ஜ்யோதிர்லிங்கமே வெளியிற் பூஜிக்கப்படுமென்றிருப்பதால் ஆந்தரபூஜையின்றி பாஹ்யபூஜை செய்தால் அவன் பிரயாசை வீணாகும். ஆதலால் ஹ்ருதய கமலத்தில் இறைவனைப் பூஜிக்கவேண்டும்.

हृत्पद्मे मनसा विभावित महामायोपरिस्थासने
ध्येयो दीपशिखाकृति स्सुकुसुमं भावक्षमार्घ्यं जलम् ।
लेपो धीरवसायिनी परशिवे प्राणोनलो मानसे
पात्रेऽहंकृतिरेष एव परमो धूपोऽथ मानात्मकः ॥
दीपस्सद्विषयास्सुतृप्तिकरणा गन्धादयः क्ष्मादिकाः
पानीयादिक दर्पण व्यजनक स्तोत्रा दिकावेदनम् ।
नैवेद्यं स्वयमुद्यता समनया सूक्ष्मांगहीनो यदायुक्तस्य
स्वयमेव नाद मनुमा चापस्स नाभ्युद्धितः ॥

— सिद्धान्त सारावलि

மனிதர்களுக்குக் கந்தஸ்தானமாகிய சரீரமத்தியம் ஒன்பது அங்குலம். அது அண்டவடிவமாய் துவக்கு முதலானதால் பூஷிக்கப்பட்டிருக்கும். அந்த கந்தத்திலிருந்து இருதகமலம் கர்ணிகையுடன் உண்டாயிற்று. அந்தக் கர்ணிகையில் சூரிய சோமாக்னி மூவரும் கூடியிருப்பார். அதில் அநந்தேச்வரர் சதாசிவர் பரமசிவர் இம்மூவரும் ஸ்வபாவமாகயிருப்பார்கள். (தொடரும்)



# செருக்கு அறுதல்



டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பிஎச். டி.

செருக்கு எனப்படுவதை 'ஆணவம்' என்று சைவசித்தாந்த சாத்திரம் சாற்றும். இது உயிர்களைப் பற்றியிருக்கும் அழுக்குக் களுள் முதலாவதும் பழமையானதும் ஆகும். இதுபற்றி இதனை 'மூலமலம்' என்றும் மொழிவதுண்டு.

வினை என்பது தொடக்கம் உடையதோ அன்றித் தொடக்கம் அற்றதோ என்ற வினாவை எழுப்பி, முதற்கண் கூறுவதுபோலத் தொடக்கம் உடையது என்று கூறினால், முன்பு இல்லாதது இடையே தோன்றும் என்பது பட்டுச் 'சற்காரிய வாதம்' என் பதற்குப் பொருந்தாது. தொடக்கம் இல்லாதது என்றால் ஒருவர் கூட்ட வேண்டுவதில்லை. இதற்கு மெய்கண்ட தேவநாயனார் கூறும் விளக்கம் ஓர் அழகிய திருப்பாட்டாக உருப்பெற்றுள்ளது.

"நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிப்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்மம் அன்றுவளாம் வள்ளலால் பொன்வான்
அவர்சோகம் செய் கமலத்து ஆம்"

இவ்வெண்பா, வினைக்குத் தொன்மை கூறவந்து இனம் பற்றி ஏனைய மல மாயைகளுக்கும் தொன்மை கூறிற்று என்பர் சிவ ஞானயோகிகள். நெல்லின்கண் உமியும், செப்பின்கண் களிம்பும் எக்காலத்து உளவாயின வென்று ஆராய்ந்து சொல்லுங்கால் அந்நெல்லும் செம்பும் உளவாயின அன்றே உள்ளனவன்றி இடையே வந்தவையல்ல. அதுபோல, மாயை (வல்லி) மலம் கன்மம் என்னும் மும்மலங்களும் அநாதியே உள்ளனவாம். முன்னே உள்ளதாகிய தாமரைப்பூ அலர்தலும் கூம்புதலும், ஞாயிற்றினாற் செய்யப்படுமாறுபோல அவை தத்தம் செயல்களைச் செய்தல் முதல்வனாலேயே ஆகும் என்பது இத்திருப்பாட்டில் நாயனார் வெளியிடும் கருத்து ஆகும்.

மூவகை வினைக்கும் முதற்காரணம் ஆகிய மூலகன்மம் ஒன்று அநாதி நித்தமாய் உண்டு என்றும், பிரபஞ்சம்போலப் பிரவாகா நாதியாய் உண்டு என்றும் இருவேறு கருத்துரைகள் சைவ சித்தாந்தத்துட் கூறப்பெறுகின்றன.

" நாசோற்பத்தி பண்ணிவரும் ஆதலால் அநாதி "
( சிவப்பிரகாசம் - பொது 16. )

" ஏகன் அநேகன் இருள் கருமம் மாயையிரண்டு
ஆகவிவை ஆறுதியில் "
( திருவருட்பயன் 52. )

" ஆணவ முதலன் றதுபோற் கருமமும் "
( ஞானமிருதம் )

என்ற பகுதிகள் இதனை இனிது விளக்கும். 'வள்ளல்' என்று பிரானைக் குறித்த பொருள் அழகில் ஈடுபடுகின்றார் சிவஞான சுவாமிகள் : வள்ளல் என்றார் தற்பயன் குறியாது " வேண்டுவார் வேண்டிய " வாறே ( அப்பர் தேவாரம் - திருமறைக்காடு, 1) நல்கும் அருளுடைமை நோக்கி என்ற அவ்வருளாளர் உரை உணர்ந்தின்புறத் தக்கதாகும்.

பயனியலில் "அவனே தானே ஆகிய அந்நெறி" என்னும் பத்தாம் நூற்பாவின் முதல் அதிகரணத்தில்,

" ஈண்டுப் பரமேசுவரன் இவ்வான்மாவாய் நின்றமுறைமை யான் அவனிடத்து ஏகனாகி நிற்க என்றது " என்ற மேற்கோளை யடுத்து, அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக்கற்று அவனது சிபாதத்தை அணையும் ஆகலான் " என்று ஏதுக்காட்டு மிடத்து, இச்செருக்கு ஆறுதல்பற்றி நாயனார் கூறி, இறைவன் திருவடி கூடுதற்கு அதுவே வழி என்று தெளிவாக்கியுள்ளார். யானும் எனதும் எனப்பகுத்து நிற்கும் மயக்க உணர்விற்கு ஏது வாகிய மலம் நீக்கி முதல்வன் திருவடியாகிய சிவானந்தத்தை ஆன்மா பெறுவதற்கு இச் செருக்கறுதல் ஒன்றே வழி; அது அறுதவழிச் சிபாதத்தை அணைதல் பெறப்படாது என்று கூறு வதற்காகவே " நிற்கவே " என்று தேற்றேகாரம் கொடுக்கப் பட்டுள்ளது எனத் தெளிவாக்குவர் சிவஞான முனிவர்.

சிவஞானச் செல்வர்களாக விளங்கிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், சுந்தரர் முதலிய அருளா ளர்கள் அனைவரும் தற்போதம் இழிந்த தகைமையாளர்கள்; இரு வகைப்பற்றும் இழந்துநின்றவர்கள். இறைவன் சீர்பாதத்தை, வையத்தில் வாழும்போதே அடைந்து அனுபவித்து இன்புற்ற வர்கள். 'அணைந்தோர் தன்மை' என்று சிவஞானபோதம் உரைக்கும் நிலைக்கு இலக்கியமானவர்கள். 'அப்பர் எங் குற்றார்' என்ற பாலறுவாயர் வினவிற்கு, 'உம் திருவடிகள் சுமந் திடும் பெருவாழ்வு பெற்று இங்குற்றேன்' என்று விடைகூறி, அவர்

இவர்ந்து வந்த சிவிகையைச் சுமந்துவந்த பணிவுடைத் திருவருட்செல்வர் திருநாவுக்கரசர். உள்ளம் உருக்கும் இந் நிகழ்ச்சி தமிழ் அன்புநெறி வரலாற்றில் மறக்க வியலாத மாண் புடையதாகும்.

'எல்லார்க்கும் நன்றாம் பணிதல்' என்ற திருக்குறட் கருத்து இங்கு முழுமை பெற்று விளங்கிடக் காண்கின்றோம்.

" பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு "

என்ற நெறிப்படி, இவ்விருவகைப் பற்றுக்களை இவர்கள் விட்ட தற்குக் காரணம் எல்லாம் வல்ல இறைவனின் திருவடிப்பற்றை இவர்கள் பற்றிக்கொண்டதே ஆகும்.

" பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பரென் றுந்தீபற
பாவிக்க வாராரென் றுந்தீபற "

(திருவுந்தியார் - 15)

என்றும்,

" பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற—பற்றினைப்
பற்றுவிடில் அந்நிலையே தானே பரமாகும்
அற்றமிது சொன்னேன் அறி "

( திருக்களிற்றுப்படியார் - 31. )

என்றும் வரும் சாத்திர வாக்குக்களாலும் இக்கருத்து விளக்கப் பட்டுள்ளது.

இறைவனுடைய திருவடிகளையே பரஞான, அபர ஞானங் களாகிய பயன்களைத் தருவன என்று போற்றிப் பரவுவர் அரு ளாளர்.

" ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்
ஞானத்தால் தொழுவேனுனை நானலேன்
ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தாய் உனை நானுந் தொழுவனே "

(அப்பர் - குறுந்தொகை - 91-3)

என்று திருநாவுக்கரசர் பாடும் பாடல், ஞானவடிவாக நிற்கும் இறைவனைத் தாம் ஞானத்தால் தொழுது நிற்கும் நிலையைச் சுட்டுகின்றது.

இருவகைப் பற்றுக்களையும் நீக்குதல் ஏகனாகி நிற்கும் இறை ஞானத்தால் விளைவதாகும்.

'ஏகனாகி நிற்கும் ஞானத்திற்கு அடிப்படை அகங்கார மமகாரங்கள் (யான், எனது) என்ற இரண்டும் நீங்குவதே' என்பதைச் சிவஞானபோத வழிநூலாசிரியர் ஆகிய அருணந்தி சிவாசாரியரும் பின்வரும் திருவிருத்தத்தில் தெளிவுறுத்தி யுள்ளனர்.

"யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதுயான் என்னும்
இக்கோணை ஞானஎரியால் வெதுப்பி நிமிர்த்துத்
தான் செவ்வே நின்றிடஅத் தத்துவன்றான் நேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட்டோடும்
நான்செய்தேன் எனுமவர்க்குத் தான் அங்கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் இன்பம்
ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பின் அல்லால்
ஒருவருக்கும் யான் எனதிங் கொழியாதன்றே"

'ஏகனாகி நிற்கும் ஞானத்தைப்' பெற்றாலன்றி யாவர்க்கும் யான் எனது என்னும் செருக்கு ஒழிதல் இன்று என்பது உணர்த்தப் பட்டது.

ஞாதிரு, ஞானம், ஞேயம் ஆகிய மூன்று நிலைகளில் நின்று காணும் காட்சியே அமையும்; அதன்மேலும் ஏகனாகி நிற்றல் எற்றுக்கு என்று கேட்பார்க்கு விளக்கம் கூறுமுகமாக அமைந்தது இது. அவ்வாறு நின்றால் அல்லது 'யான் எனது என்னும் செருக்கு அறுதல்' முதலியன முறையே நிகழ்ந்து முத்தியைத் தலைக்கூடுதல் செல்லாது' என்று விளக்குவதாக அமைகின்றது இவ்விளக்கம்.

புண்ணிய தேயங்களிற் சென்று புண்ணியதலம் புண்ணிய தீர்த்தங்களைத் தரிசித்து ஆடுகின்றனர் பலர்; காட்டிலே சென்று காய் கனி கிழங்குகளை உண்டு வருந்துகின்றனர் பலர்; மலைக் குகைகளின் உள்புக்கு யோகம் இருக்கின்றனர் பலர்; அவ் யோகப்பயிற்சி ஆற்றலால் பசி, நீர் வேட்கை முதலியன நீங்கி விளங்குகின்றனர் பலர்; நெடுங்காலம் மரணமில்லா நிலை பெற்றுப் பிறங்குகின்றனர் பலர்;

இவ்வாறு பல்வேறு நிலைகளிற் சென்றாராயினும் நிருமல மான இறைபணியின் நிற்றலாகிய மெய்த்தொண்டு செய்யும்

ஞானம் இல்லாதவர்க்கு இவ்வகப்பற்றுப் புறப்பற்றுக்கள் நீங்க மாட்டா; மீண்டும் பிறந்து இறந்து வருந்துவர். இதனைச் சிவஞானசித்தியார்த் திருவிருத்தம் அழகுற விளக்குகின்றது.

" நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மல ஞானத்தை யில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் இறைஞானம்
கூடுபவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே யிருப்பர்.

'அரன்பணியில் நிற்றலாகிய' ஞானத்தைப் பெற்று இருவகைப் பற்றுக்களையும் அறவே விட்டவர், பெறுதற்குரிய வீட்டினைப் பெற்றுச் சிவந்த குஞ்சிதபாதத்தின்கண் அடங்கிநிற்பர் என்கின்றார் அருணந்தி சிவாசாரியர்.

திருவள்ளுவர் தம் பொதுமறையில், "யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்" என்று கூறுவதன் விளக்கம் சைவசித்தாந்த மெய்கண்ட சாத்திரத்துள் இவ்வாறு இனிது விளங்குகின்றது. 'யான் எனது என்று அற்ற விடமே திருவடியாம்" என்று குமரகுருபர அடிகளாரும் கூறுவர். 'செருக்கு அறுதல்' என்பது சமயவாழ்வில் திருவடிப் பேற்றிற்கு அடிப்படை என்பதை இவ்வனைத்துக் குறிப்புக்களும் நன்கு காட்டுகின்றன.

---

## EXTRACT FROM THE VISITOR'S BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Sirkazhi.

"I am happy to visit this so holy and beautiful temple. I take the opportunity to express my gratitude to all Temple authorities and officials who allow me such a visit and who welcome me so heartily."

(Sd.) F. Mutin,
Paris (France.)

9—8—73.

# குறள் நோக்கும் கவி

திரு. அ. கலியபெருமாள் எம். ஏ.,

உலகில் ஒரு பகுதி :-

சுட்டுப் பொசுக்கும் சூரியன் விண்ணிலே; பட்டுக் கருகும் தாவரங்கள் மண்ணிலே. வெடித்துக்கிடக்கும் வயல்கள் ஒரு புறம்; துடித்துக் கிடக்கும் உழவன் மறுபுறம். பாலையில் வளர முற்படுவன போன்ற சோலைகள். அங்கே காலையும் மாலையும் உச்சிப்பொழுதுச்கு வேறு பெயர்கள். ஒரு காலத்தில் நீர் நின்று விளங்கியதால் இன்றைக்கும் நீர்நிலை, தன்பெயரை இழக்க வில்லை. நீர்வளம் இன்மையால் நிலவளம் இல்லை. நிலவளம் இன்மையால் நெல்வளம் இல்லை. பஞ்சமில்லாதது அங்கே ஒன்று; அது பஞ்சமே. எங்கு நோக்கினும் வறுமை; உயிர்கள் சீரழியும் சிறுமை. இத்தகு கொடுமைக்கெல்லாம் காரணம். இறங்கிப் பெய்யும் வானம் இரங்காததே !

வையத்தின் மற்றொரு பகுதி :-

கூடி முழங்கும் மேகக்கருமை விண்ணிலே, ஆடிக் கொழுக்கும் பயிர்ப்பசுமை மண்ணிலே. குழைந்து கிடக்கும் வயல்கள் ஒரு புறம்; விழைந்து நடக்கும் உழவன் மறுபுறம். பன்னீரில் வளர முற்படுவன போன்ற சோலைகள். அங்கே உச்சிப்பொழுது, காலைக்கும் மாலைக்கும் அமைந்த வேறுபெயர். என்றைக்கும் நீர்நிலைக்கும் என்பதால் இன்றைக்கும் நீர்நிலை, தன்பெயர் இலங்க நிற்கிறது. நீர்வளர் உண்மையால் நிலவளம் உண்டு, நிலவளம் உண்மையால் நெல்வளம் உண்டு. பஞ்சமுள்ளது அங்கே ஒன்று; அது பஞ்சமே. எங்கு நோக்கினும் செழுமை' உயிர்கள் சிறோங்கும் பெருமை. இச்செம்மைக்கெல்லாம் காரணம் இறங்கிப் பெய்யும் வானம் இரங்கியதே.

வானின் இத்தகு சிறப்பால் அன்றோ, வான்புகழ் வள்ளுவன் கடவுள் வாழ்த்தை அடுத்து வான் சிறப்பைப் பெய்துள்ளான். வான் சிறப்பைப் பத்துக் குறள்களில் வாயாரப் போற்றுவதோடு அமைந்திலர் வள்ளுவர். வெவ்வேறு அதிகாரங்களிலும் அதன் சிறப்பை ஒவ்வுமாறு பாடியுள்ளார். உவமை வாயிலாகவும் பாடத்தயங்கவில்லை, தனக்குவமை இலாதகவி.

இறைமாட்சியில் தொடங்கி, அரசன் இயல்புகளைப் பல அதிகாரங்களில் கூறிவரும் தெய்வப் புலவர், செங்கோற் சிறப்பைச் செங்கோன்மை அதிகாரத்திலும் செப்புகிறார். குடி மக்களின் வாழ்வும் தாழ்வும் முடிமன்னரின் கோலே. வளையும் கோல் மக்கள் வாழ்வை வளைக்கும்கோல். நேர் நிற்கும்கோல், வாழ்வை நேர்நிறுத்தும்கோல். கோலின் செம்மை, குடிகளின் செழுமை. மன்னவன் கோலை நோக்கி வாழ்பவர் குடிகள். கோல் பிழைப்பின் குடி பிழைக்குமோ !

குடிக்குக் கோல் எத்துணை இன்றியமையாதது என்பதை விளக்க நினைத்த வள்ளுவர்க்கு மழையின் நினைவு வருகின்றது. மழையின்றேல் ஒரு மண்ணும் இல்லை. உயிர் வாழும் ஆகத்தின் துடிப்பு. உயரத் தவழும் மேகத்தின் துடிப்பில் அடங்கி உள்ளது. வானையே நோக்கி வாழ்கிறது உலகு; அதுபோல் மன்னவன் கோலையே நோக்கி வாழும் குடி.

"வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழும் குடி"

வள்ளுவமேகம் பெய்த மழையிலே நனைந்து மகிழ்ந்தவர் பலர். அவருள் ஒருவர் அறுமுகன் காதை அளித்த கச்சியப்பர். குறளில் அவர் கொண்ட ஈடுபாடு குறிக்கத் தக்கதாய் விளங்கு கிறது. நுதல்விழி நாட்டத் தவனும் காமக் கண்ணியும் எழுந் தருளி அடியாரைச் சிவபோகம் நுகர்விக்கும் தலம் காஞ்சி. அதன் பெருமையைக் கூறும் அருள்தமிழ்ப்பாடல்கள் பல. பொய்கை வளமும் பூசனை செய்கைவளமும் பொருந்திய காஞ்சியைப் போற்றாதார் யார்? புகுந்து பயன் எய்தாதார் யார்?

அன்னம் நடந்து சென்ற அடிச்சுவடு. அயன் நித்த நித்தம் ஆலாலமுண்டவனை அடி வணங்கிப் போனதற்கு அடையாளம்; கருடன் வைத்த காலடி, கார்முகில் வண்ணன் கண்டு போற்றிய தற்குக் கரி. வெள்ளைவாரணம் பதித்துவிட்ட பாதச்சுவடு, விண்ணவர் வேந்தன் விழ்ந்து பணிய வந்ததற்குச் சான்று.

குற்றமில்லாத் தேவராயினும் குறைதீரக் காஞ்சியைத்தான் நாடுவர்; நாகலோகத்தாராயினும் நாடுவது காஞ்சியையே. இவ்வுலகத்தார் அனைவரும் காஞ்சியை நாடுவது இயல்பே அன்றோ! சுருங்கக் கூறின் மூவுலகத்தவரும் கச்சி நகரையே நோக்கி வாழ்கின்றனர். எதுபோல என்று உவமை ஒன்று இயம்பவந்த கச்சியப்பர் வள்ளுவரை நோக்கினர். "வானோக்கி

வாழும் உலகெல்லாம்; மன்னவன் கோனோக்கி வாழும்குடி" என்ற குறள், கச்சியப்பர் நாவுக்குக் கைகொடுக்கிறது.

மழையை நோக்கி நிற்கின்றது வையம்; மன்னவன் செங்கோலை நோக்கி நிற்கின்றார் குடிமக்கள். அதுபோல, தேவரும் நாகரும் அவனியோரும் அணிபெறு காஞ்சியையே நாடுகின்றனர்.

> "வானோக்கி நிற்கும் உலகென்னவும் மன்னவன்செங்
> கோனோக்கி நிற்கும் குடியென்னவும் கோதிலும்பர்
> ஆனோர்க்கும் நாகர் உலகோர்க்கும் அவனியோர்க்கும்
> ஏனோர்க்கும் நாடும் நகராகி இருந்த தவ்வூர்"

கோதிலாக் கச்சியப்பக் கவி, குறள் நோக்கும் கவியன்றோ !

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Kambahareswaraswamy Devasthanam Thirubuvanam.

I had the rare opportunity for dharshan at this temple. The temple premises is kept very clean and sanctity is maintained.

(Sd.) R. Ramanathan,
22—12—73. Asst. Examiner Temple Audit.

• • • •

Dharmapuram Adhinam

Sri Panchanatheeswaraswamy Devasthanam, Thiruvaiyaru.

May the Lord of the Five River remind us of the source from which the world of the many appear. The devotion and upkeep of this temple has impressed us and we are grateful to have seen it.

(Sd.) Frederica,
Her Majesty Queen mother of Greece.
(Sd.) Irene,
25—12—73. H. R. H. the Princess of Greece.

# வாழ்வும் சமயமும்

திரு. T. G ரங்கநாதன், B. A., B. L.,

உலகில் உள்ள உயிர்த்தொகைகள் பலவாகும்; அவை ஓரறிவு முதல் ஆறறிவுவரை உடையவைகளாய்த் திகழ்கின்றன. இவற்றுள் ஆறறிவுடன் கூடிய மக்களாய்ப் பிறத்தலே உயர்ந்த பிறவி எனப்படும். அவரவர்கள் முற்பிறவிகளிற் செய்த நல்வினை தீவினைகட்கேற்பவே இப்பிறவி அமைகிறது. இதன் அருமையையும், சிறப்பையும் உணர்வோர் சிலராவர்; அதிலும் காடு, மலை முதலான இடங்களில் விலங்குகளை வேட்டையாடித் தின்று உயிர்வாழும் மக்களாக இல்லாமல் தெய்வமணங்கமழும் நாட்டிற் பிறந்து பிறவியின் பயனை உணர்ந்து அதனைப்பெறும் முயற்சிகளில் ஈடுபடுவது புண்ணியப் பயனாய் விளைவது; இப் பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ தெரியாது; இந்நிலையில், கிடைத்த நல்ல பிறவியைப் போற்றிக்கொண்டு பிறவிப் பயனை அடைவதே அறிவுடைமை யாகும்.

பிறவிப் பயனாவது யாது? அதனை எவ்வாறடைதல் வேண்டும்? என்பதை மக்கள் உணர்தல் வேண்டும்; "இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது, நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறுதற் பொருட்டேயாகும்" என்பது ஆன்றோர் அருளிய நல்லுரை; எனவே, உலக வாழ்க்கையில் இறைவனது திருவருள் பெறுவதையே இலட்சியமாகக் கொண்டு நாம் வாழவேண்டும்.

உடல் உறுப்புக்களைச் செம்மையாகத் தந்து, இவ்வுலக இன்பங்களையெல்லாம் நமக்கு வழங்கியருளிய இறைவனை வணங்குதல் நன்றிக்கடனாகும். திருநாவுக்கரசு சுவாமிகள் திருவங்கமாலைத் திருப்பதிகத்தில் நம் உடலுறுப்புக்கள் இறை வழிபாட்டுக்கே தரப்பெற்றது என்பதை அருளிச்செய்கிறார். "தலை அவனை வணங்குதற்கும், கண்கள் அவனைக்காணுதற்கும், செவிகள் அவன் புகழைக் கேட்டற்கும், வாய் அவனை வாழ்த்தற்கும், நெஞ்சு அவனை நினைத்தற்கும், மூக்கு அவன் மந்திரங்களை முரலுதற்கும், கால்கள் அவன் கோயிலை வலம் வருதற்கும் தரப்பெற்றுள்ளன" என்று கூறுகிறார். வள்ளுவர், "இறைவன் தாளை வணங்காத்தலை பயனற்றது" என்று குறளில் இறைபணியில் ஈடுபடாத உடலுறுப்புக்கள் பயனற்றவையாகும்

என்பதை வலியுறுத்துகிறார். எனவே, மக்கள் இறைபணியில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளுதல் இன்றியமையாதது என்பதை நாம் அறிகின்றோம்.

நமக்குக் கிடைத்த உடம்பு புன்புலால் யாக்கையாக இருந்தாலும், அதை இறைவன் உறையும் பொன்னெடுங் கோயிலாகச் செய்துகொள்ள முடியுமென்பதைத் திருமூலர் முதலிய சிவயோகிகள் தெரிவிக்கின்றனர்.

> " உடம்பா ரழியில் உயிரா ரழிவர்
> திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
> உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே
> உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே "

என்பது திருமூலர் திருவாக்கு. எனவே, கிடைத்தற்கரிய நமதுடம்பை அழியாமல் போற்றிக் கொள்வதும், அவ்வுடலைக் கொண்டு அருள் நலம் பெறுவதும் நாம் செய்யத்தக்க கடமைகளாகும்.

இறைவழிபாடு இந்த உலகவாழ்க்கைக்குத் தடையாக இருப்பதில்லை; முழுநேரமும் இறைவழிபாட்டுச் சிந்தனைகளிலேயே நம்மை ஈடுபடுத்திக்கொண்டு வாழ்வதென்பது பலர்க்கு இயலாத ஒன்றுயிற்றே என்று கூறலாம். நாள்தோறும் சிலமணி நேரமாவது சிவசிந்தனைகளில் நாம் ஈடுபடுவது உலகவாழ்க்கைக்கும் உயிர் வாழ்க்கைக்கும் பெரும்பயன் விளைக்கும். இவ்வுலகில் நமக்கு ஏற்படும் பல்வேறு இடையூறுகளையும் இறையருளிருந்தால் நாம் வெல்லமுடியும். எனவே, கடவுள் வழிபாடு நமக்கு மிகமிக இன்றியமையாததே. இறைவன் கருணையை, நம்பால் எளிதில் பெற்றுத்தருவன பன்னிரு திருமுறைகளாகும். அவற்றைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி நாம் ஓதினுல் உய்யலாம்.

திருமுறைகள், இம்மை மறுமை இரண்டிற்கும் நன்மை செய்வன; " இம்மையேதருஞ் சோறுங் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம், அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே " என்ற தேவாரப் பாடலில் வரும் தொடர்களை நாமறிதல் வேண்டும். உலகவாழ்க்கையில் மக்கள் விரும்புவது செல்வம்; " பொருளிலார்க்கிவ்வுலக மில்லை " என்பது வள்ளுவர் வாக்கு; அத்தகைச்செல்வத்தை இறையருளால் நமக்குப்பெற்றுத் தரவல்லது, திருமுறையில் " இடரினும் தளரினும் ...... " என்ற திருஞானசம்பந்தர் திருப்பதிகமாகும். ஆளுடைய பிள்ளையார் திருவாவடுதுறையில் இப்பதிகத்தைப் பாடி உலவாக்கிழி பெற்ற வரலாற்றை உலகறியும். இவ்வாறு பல்வகை நலங்களையும்

பெறுதற்கும், நோய்நீக்கம், கிரக தோஷ நிவர்த்தி போன்றவை கட்கும் பல திருப்பதிகங்கள் உள்ளன. அவற்றை அன்பர்கள் உணர்ந்தோதினுல் உலகவாழ்க்கையிலும் சமயம் நன்மைசெய்யும் இயல்பினை அறிவார்கள்.

நவக்கிரக தோஷங்களிலிருந்து விடுபட "வேயுறு தோளி பங்கன்" என்ற பதிகமும், ஜுரம் முதலிய நோய் நீக்கம் பெறு தற்கு "அவ்வினைக் கிவ்வினை" என்ற பதிகமும், வயிற்றுவலி தீர "கூற்ருயினவாறு" என்ற திருப்பதிகமும், விஷம் நீங்க "ஒன்றுகொலா"மென்ற திருப்பதிகமும் போன்றவை அன்பர் கள் பலரும் ஓதிப் பயன் பெறும் பதிகங்களாகும். இவைபோன்ற பல்வகைப் பயன்களையும் தரவல்ல பலதிருப்பதிகங்கள் திருமுறை களிலுள்ளன. "மந்திரமாவது நீறு" என்ற திருப்பதிகத்தை ஓதித் திருநீறணிவார் நன்மை பெறுவர் என்பதை சமய உலகம் முழுமையாகக் கருதுகிறது; எனவே, நம்முடைய சமயநெறிக ளனைத்தும் நம் வாழ்க்கைக்குப் பல வழிகளிலும் துணைசெய் கின்றன என்பதை உலக மக்கள் உணர்ந்து பயன்பெற வேண்டும்

பொன்னையும் பொருளையும் பெற்றபின் வாழ்க்கைத்துணை நலத்தை மக்கள் நாடுவதியற்கை. "சடையாயெனுமால்......" என்ற ஞானசம்பந்தர் பதிகத்தை ஓதும் கன்னிப்பெண்கள் விரைவில் கடிமணம் பெறுவர்; மேலும் இப் பதிகம் விடம் தீர்த்த சிறப்பையுமுடையது. "கண்காட்டு நுதலானும்" என்று தொடங்கும் வெண்காட்டுப் பதிகம் நன்மக்கட்பேற்றை வழங்கு வது. இப்பதிகத்தின் ஒருபாட்டுத்தான் மெய்கண்டாரை நமக்குப் பெற்றுத்தந்தது. ஞானசம்பந்தர் மதுரையில் அமணர்களுடன் வாதம் புரிந்து வெல்லுதற்குப் பாடிய "வேதவேள்வியை" என்ற பதிகம் நாம் வாழ்க்கையில் மற்றவர்களை வாதில் வெல் வதற்குத் துணைசெய்வது. கண்ணோய் நீக்கம்பெற, சுந்தரர் பாடிய "ஆலந்தானுகந்து" "மீளா அடிமை" முதலிய திருப் பதிகங்கள் உதவுவன. முடக்குவாதம் போன்ற நோய் நீக்கம் பெற "துனிவளர் திங்கள்" என்ற பதிகம் உதவும். இவ்வாறு பன்னிரு திருமுறைகள் நமக்குப் பல்வகைகளில் உலகவாழ்க் கைக்கு உதவும் நூல்களாக உதவுகின்றன. நாம் அனைவரும் தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் கூறியபடி திருமுறைகளை ஓதியுணர்ந்து உய்வோமாக!

"ஆசையருப் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணுய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்"

தருமபுரம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் வரலாறு

திருமுறைக் கலாநிதி

## திரு அ. நடேச தேசிகர்

திருமகள் உறையுப்ஸ்ரீ வில்லிபுத் தூர்எனும்
நற்பதி தோன்றிய ஞானசம் பந்தன்
அரும்பெருந் தந்தை தாயா ருடனே
அண்ணலைக் காண ஆலவாய்க்கு வந்தான்
பெருவிருப் பால்உமை பாகனைப் பணிந்து
பேரருள் பெற்றுப் பெருமகிழ் வுற்றான் ;
வருமா றழைக்க மறுத்திடக் கண்டு
மைந்தனை விடுத்துத் தந்தைதாய் சென்றனர்.
மதுரையில் பொற்றா மரைதனில் சொக்க
நாதரை அடியார் பூஜைகள் செய்ய
இதுபோல் யானும் செய்திட விலையே
என்றவன் மனமும் உருகிடக் கண்ட
மதுமலர்க் கொன்றை மாலை அணிந்த
மாபெரும் சொக்க நாதனும் மகிழ்ந்து,
இதைநாம் செய்திட வேண்டுமென் றெண்ணிய
இவனது கனவில் தோன்றியே சொன்னான்
'அன்பர்கள் நம்மைப் பூஜைகள் செய்தால்
அவர்மனத் துள்ளிருந் தானந்தங் கொள்வோம்
இன்றுநம் பொற்றா மரைதனில் மூழ்கி
எமைப்பெறு வாயென்' றருள்புரிந் திடவே
நன்றருள் புரிந்தீர் என்றிவன் மகிழ்ந்து
நறுமலர்ப் பொற்றா மரைதனில் மூழ்க,
அன்றிவன் கரத்தில் அருட்சிவ லிங்கம்
தோன்றிட இன்பம் தான்மிகக் கொண்டான் ;
'அண்ணலே உன்னைப் பூஜைகள் செய்ய
அறிந்திலேன் மந்திர மாவதொன் றறியேன்
பண்ணினால் உன்னைப் பாடவும் அறியேன்
பரம்பொரு ளேஎனக் கருள்புரி வாய்'என
'மண்ணிலே சிறந்த ஆரூ ரதனில்
மாபெரும் கயிலைப் பரம்பரை வந்தோன்

நண்ணியே அவன்பால் நயந்துடன் சென்றே
எமைப்பூசை செய்யும் முறையெலாம் பெறு ‘கென
ஆங்கருள் வாக்கைக் கேட்டிவன் மகிழ்வுற்(று)
அடியிணை மாமலர் அன்புடன் இறைஞ்சி
ஈங்கிவன் பெற்ற மூர்த்தியை எடுத்தே
ஏகினான் ஞானப்ர காசர் பாலே
ஆங்கவ னுக்கு முன்னே உணர்த்த
அவன்இவன் வரவை எதிர்கொண் டழைத்தான் ;
தாங்கொணா ஆசையால் இருவரும் மகிழ்ந்து
தான்பெற்ற பூஜை முறையெலாம் சொன்னான்
பரமனைப் பூஜை செயும்முறை எல்லாம்
பண்புடன் காட்டிப் பணிந்திடச் செய்தான் ;
அரனவன் கோயில் தினம்பணிந் தாங்கே
அண்ணல் முன்மோன நிலையிலே நின்றான்
திருவிளக்கு எடுப்பவன் படுத்தே உறங்கச்
செய்பணி நமக்குக் கிடைத்ததிங் கென்றே
அரும்பணி அதனை ஞானசம் பந்தன்
ஆசான்முன் கைவிளக் கதுகொடு சென்றான்.
ஒப்பிலா ஞானப் பிரகாசர் கண்டார்
‘உனக்கிது தகுமோ விளக்கிதை வை’யென
‘இப்பெருந் தொண்டெனக்கு இன்றைக்குக் கிடைக்க
என்செய்தேன் தவம்முற் பிறப்பில்’ என்றான்
அப்பொழுது அவன்மனம் இருத்தலைக் கண்டார்
‘அண்ணலின் செயலோ இது’வென நினைந்தார்
ஒப்பிலாத் தன(து) இல்லத்தில் வந்தங்(கு)
உடன்வந் தவனை ‘நில்’லெனச் சொன்னார்.
அன்றிர வெல்லாம் பெருமழை பொழிய
அவனைச் சுற்றிலும் மழையிலா திருப்ப
நின்றனன் ; காலையில் குருமனை யாள்அவன்
நிற்பதைக் கண்டு கணவருக்கு உரைக்க,
என்ன காரியம் செய்திட் டேன்என்(று)
எழுந்தவர் ஓடி இவன்முன் வந்து
‘நன்றது செய்திலேன் நான்உனக் கிங்கே
நற்பெருஞ் செயலை நான்இன்று கண்டேன்.
மண்ணிநல் ஆற்றில் பூஜைகள் செய்த
மாபெருஞ் சண்டி கேஸ்வரன் றனக்கும்
புண்ணிய கம்பை மாநதி அதனில்
பூஜைகள் செய்த உமையவள் தனக்கும்
அண்ணல் யார்க்கும் சிவலிங்கம் தந்திலன்
அவ்வவர் மணலாற் கூப்பியே செய்தனர்

உண்மகிழ்ந் துனக்குச் செய்தது போலே
உலகில் யார்க்கும் செய்திலன் பரமன்.
என்ன புண்ணியம் நீசெய் தனையோ
இறைவன் உன்பால் அன்புகொண் டிருக்கப்
பன்னாள் அவனைப் பூஜைகள் செய்தும்
பார்த்திலேன் ஒருநா ளாயினும் அவனை
முன்னம்நான் செய்த தவக்குறை யாலே
மூர்த்தி வெளிப்படா திருக்கின்றான் போலும்
அன்னவன் றனக்கு நீநல அடியான்
அருள்வடிவு அதனால் அருளினன் உனக்கே.
குருவாய் உனை நீ குறித்திலை யாயினும்
குருவின் தன்மை உனக்குள து அதனால்
தருமையிற் சென்று வரும்அடி யார்க்குத்
தான்உப தேசம் செய்தங் கிருப்பாய்
பெருகிடும் செல்வம் அடியார் கூட்டமும்
பேரரு ளாளன் உன்பால் இருப்பதால்
மறவா தவனைத் தினம்வழி பட்டு
மாபெரும் பூஜையைச் செய்தங் கிரு’என
‘இல்லறத் தில்லிருந் தென்னையாட் கொண்டீர்!
இப்பெருந் தன்மையை என்றும்நான் மறவேன்
சொல்லுதற் கரிய துறவியாய் இருக்கத்
தோற்றம் என்மனத் துள்ளிருப் பதனால்
இல்லையென் றது காவி உடைதனை
எனக்குத் தேவரீர் ஈந்திடு வீர்’எனக்
‘கல்லாடை புனைய விருப்பம் இருப்பதால்
கருத்தின் படியே கொடுத்தோம்’ என்றனர்.
‘இப்பெரும் பேற்றை எனக்களித் திட்டீர்’
என்றதைச் சொல்லி இணையடி பணிந்தே
ஒப்பிலா ஞானப் பிரகாச மாலையாம்
உயர்ந்தநற் றமிழை அவர்மீது பாடிச்
செப்பிய படியே தருமையிற் சென்று
சிவபெரு மானைப் பூஜைகள் செய்தார்
ஒப்பிலா அடியார் வருபவர்க் கெல்லாம்
உபதேசம் செய்தே உள்மகிழ்ந் திருந்தார்.
ஆங்குள மக்கள் அனைவரும் வந்துநல்
அடியிணைத் திருமலர் அவைகளை இறைஞ்சியே
ஈங்குச் சுவாமிகள் இருப்பதற் காக
இடமொன்றை அமைத்து அவர்களே கொடுத்துத்
தீங்கிலா அடியார் பூஜையைத் தாங்கள்
தினம்தினம் ஒருவராய்ச் செய்திட ஏற்றுப்

பாங்குடன் சொக்க நாதரின் பூஜையைப்
பல்லோரும் கண்டு தெரிசித்து வந்தார் ;
இவர்களின் பெருமை உலகெலாம் பரவ
எண்ணிலா அடியார் தினம்வரக் கண்டனர்
அவர்களுக்கு அன்னம் இடுவதற் காக
அருந்தவப் பெருக்கால் செம்பைப் பொன்னுக்கி
நவதா னியமும் கடைகளிற் பெற்று
நாள்தோறும் அன்னம் இடுகின்ற போது,
புவனியை ஆளும் அரசர்கள் கேட்டுப்
போய்நாம் தரிசிக்க வேண்டுமென் றெண்ணினர்;
அரசர்கள் பல்லோர் தருமையில் வந்தே
அருந்தவம் புரியும் அடிகளார் கமலத்
திருவடி அதனில் விழ்ந்தவர் இறைஞ்சிச்
'செய்பணி இங்கு வேண்டுவ துரைத்தால்
தருவதற் கிங்கே சித்தமாய் உள்ளோம்'
என்றதைச் சொல்லி நிற்பதைக் கண்டு,
'வருகின்ற அடியார் மகேஸ்வர பூஜைக்கு
வகை செய் தாற்போது'மென் றுரைத்தனர் அடிகள் ;
இங்ஙனைக் கேட்டே அகமகிழ்ந் தவர்கள்
அதற்கான நிலங்களை இவர்கள்பால் கொடுத்துவான்
அந்த திருக்கோயில் பூஜைகள் நடாத்த
உரியவர் இவர்களே என நினை வுற்றே
ஆங்கதற் கான பெரும்நிலம் எல்லாம்
ஆங்காங்கே விடுத்து அடிகளே இதனைப்
பாங்குடன் செய்வீர் என்றதைச் சொல்லிப்
பணிந்து விடைபெற்றுத் தம்நகர் சென்றனர்.
அது முதல் அண்ணல் கோயில்கள் பூஜை
ஆகம விதிப்படி அனுதினம் வழுவா(து)
அது இவர் செய்து வருகின்ற தாலே
எங்கும் சுபிட்சமாய் வாழ்கின்றுர் மக்கள்
அது முதற் கயிலைப் பரம்பரை யாக
ஆதீன முதல்வராய்த் தோன்றிய பல்லோர்
நதிமுடி தரித்த சொக்கேசன் அருளால்
நலம்பெறச் செய்து வாழ்கின்றுர் இங்கே.

சைவநற் சமயம் தன்னில் உதித்தவர் பலரும் வந்தே
உய்வதற் கானநல்ல உபதேசம் குரு இடத்தில்
செய்துநாம் கொள்ள வேண்டும் சிறப்புடன் வாழ்வதற்கே
ஐந்தெழுத் தோதினுலே அகன்றிடான் ஈசன்நம்பால்.

வாழ்க சைவ சமயம் வாழ்க
வாழ்க சிவனடி யார்கள் வாழ்க
வாழ்க குருஞான சம்பந்தர் வாழ்க
வாழ்க தருமை நீடுழி வாழ்க.

திருச்சிற்றம்பலம்

---

கடிதம் :

C. N. Singaravelu, M. A.,
Asst. Secretary to Govt.,
Home Department (Retd.)
Secretary,
Official Language Committee. (Retd)

" Sivamanam "
28, Second Cross Street,
West C. I. T. Nagar,
Madras-35.

" ஞானசம்பந்தம் " இதழ் 32 ஆண்டு நிறைவு பெற்றது குறித்து மிக்க மகிழ்ச்சியும் மடாலயத்திற்குப் பாராட்டும் தெரிவித்துக் கொள்கிறேன். இவ்விதழ் பலவகையிலும் சிறந்து விளங்குகின்றது என்பது வெள்ளிடைமலே.

சித்தாந்தக் கலேமணி திரு. சி. அருணேவடிவேல் முதலியார் அவர்கள் சிவஞான சித்தியார் தெளிபொருள் விளக்கம் துவக்கியிருப்பது எம்போன்ருர்க்கு மிகவும் பயன் தரும். சித்தியாரில் பரபக்கம் துவக்கியிருப்பதாகத் தெரிகிறது. இதில் பாயிரச் செய்யுட்களே முடித்துவிட்டு, சுபக்கமே துவக்கிவிட்டால் நல்லது என்று தோன்றுகிறது. முன்னர் இவர் இவ்விதழில் சித்தாந்த அடிப்படை உண்மைகளே வினு விடை மூலம் விளக்கி வந்தார். பின்னர் இவரால் திருவருட்பயனுக்கு அருமையான உரை எழுதி நிறைவு பெற்றுவிட்டது. இவ்விரண்டையும் கூடிய விரைவில் நூலாக வெளியிட்டால் பலருக்கும் பயன் தரும். இதற்கு ஆவன செய்யும்படி மகாசந்நிதானத்தை வேண்டிக் கொள்கிறேன்.

வணக்கம். நன்றி.

(ஒ-ம்) கொ. தீ. சிங்காரவேலு.

# பூசத் துறை

திரு. என். இராமகிருஷ்ணு

பூசத்தில் தைமாத பூசம் விசேஷம். அதுவும் திருஇடை மருதூரில் மிகமிக விசேஷம். இடைமருதூர் என்பது தலத்தின் பெயர். தலங்களின் பெயர்களுக்குத் திரு என்னும் அடை கொடுப்பது வழக்கமாதலால் திருவிடைமருதூர் என்று வழங்கு கின்றது. மருதூர் என்று பல ஊர்கள் இருக்கின்றன. இந்தத் தலத்தில் மருதமரம் க்ஷேத்திரத்திற்கு விருட்சம். ஆதலால் மருதூர் என்று பெயர் பெற்றது. மருதமரத்தை அர்ஜுன விருட்சம் என்று வடமொழியில் சொல்வார்கள். இடைமருதூர் என்பது மத்யார்ஜுனம் என்று வழங்கும். வடக்கே உள்ள ஸ்ரீசைலம் ஒரு மருதூர். அதற்கு மல்லிகார்ஜுனம் என்று பெயர். அது தலைமருதூர். இது மத்யார்ஜுனம் அல்லது இடைமருதூர். திருநெல்வேலி ஜில்லாவில் திருப்புடைமருதூர் என்று ஒருதலம் இருக்கின்றது. புடார்ஜுனபுரம் என்பது அதற்கு வடமொழிப் பெயர். மல்லிகார்ஜுனத்திற்கும், புடார்ஜுனத்திற்கும் இடையிலே இருப்பதால் இதற்கு மத்யார்ஜுனம் எனப்பெயர் வந்தது. இந்தத் தலம் தேவாரம் பெற்றது. இங்குள்ள மூர்த்திக்கு மஹாலிங்கம் என்று பெயர். அம்பிகையின் திருநாமம் பெருமுலை நாயகி அல்லது பிருகத்குசாம்பிகை. அம்பிகை இங்கே தவம் செய்ததாக ஓர் ஐதிகம் உண்டு. அந்தக் கோலத்தில் மூகாம்பிகை என்ற பெயரோடு அம்பிகை எழுந்தருளியிருக்கும் தனிக் கோயில் இங்கே இருக்கின்றது. அதன் விமானம் வடநாட்டுக் கோவில் போல் உள்ளது.

நோயுற்றவர்களும் பேய் பிடித்தவர்களும் இந்தத் தலம் வந்து சேவை செய்து தங்கள் குறைகளைத் தீர்த்துக்கொண்டு சுகமடைகின்றார்கள்.

முன்காலத்தில் " வரகுணன் " என்னும் பாண்டியன் பிரம்மஹத்தியால் பிடிக்கப்பட்டு மிக்க வருத்தத்தை அடைந்தான். பல இடங்களில் திரிந்து விட்டு இந்தத் தலம் வந்து கோவிலுக்குள் நுழைந்தான். கிழக்குவாசல் வழியாகச் சென்றபோது வாசலிலே பிரம்மஹத்தி நின்றுவிட்டது. கோவிலுக்குள் புகுந்தவுடனே விடுதலை பெற்றவன் போன்ற இன்பம் அடைந்தான். இறைவனை வணங்கி மேற்குக் கோபுர வாயில் வழியாகப் போய்விட்டான். பாண்டியன் வரப்போகிறான் என்று பிரம்மஹத்தி காத்திருந்தது என்று திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. இன்றும் கிழக்கு வாயிலில் ஓரிடத்தில் தலையை முழங்கால் மேல் வைத்து

உட்கார்ந்தபடி இருக்கும் கோலத்தில் பிரம்மஹத்தி பிம்பம் இருக்கின்றது. இது மேற்குறித்த புராணத்தின்படி பாண்டியனைப் பிடித்த பிரம்மஹத்தியாயினும் வழக்கத்தில், சோழப் பிரம்மஹத்தி என்று சொல்லப்படுகிறது. "சோழப்பிரம்மஹத்தி" என்று வைவதும் தமிழ் நாட்டில் வழக்கம்.

இக்கோவில் விரிந்த பிராகாரங்களை உடையது. இதன் வெளிப்பிராகாரத்தை வலம்வந்தால் பல அசுவமேத யாகங்களைச் செய்த பலனை அடைவார்களாம். அதனால் அதற்கு அசுவமேத பிரதட்சிணம் என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது.

கோவிலுக்கு எதிரில் காருண்யாமிர்தம் என்ற தீர்த்தம் உள்ளது.

இத்தலத்தில் வரகுணபாண்டியன், கண்ணபிரான், பட்டினத்தார், நளன், பலராமன், பகீரதன், பரீட்சித்து முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றார்கள்.

பட்டினத்தாரும், அவர் சிஷ்யராகிய பத்திரகிரியாரும் இந்தத் தலத்தில் இருந்தார்கள். பட்டினத்தார் பசித்தபோது யார் வீட்டுக்கேனும் சென்று வாயிலில் நின்று அவ்வீட்டார் இடுவதைக் கையில் ஏற்று உண்டுவிட்டு ஆலயத்தின் கீழைக் கோபுர வாயிலில் இருந்துவருவார். பத்திரகிரியாரோ ஓடு ஒன்று வைத்திருந்தார். அதில் பிட்சை ஏற்று உண்டார். மிஞ்சியதை ஒரு பெண்நாய்க்குப் போடுவார். அந்த நாய் எப்போதும் அவருடன் இருந்தது. அவர் ஆலயத்தின் மேற்குக் கோபுர வாயிலில் இருந்து வந்தார்.

ஒருநாள் பிச்சைக்காரன் ஒருவன் கீழைக் கோபுர வாயிலில் இருந்த பட்டினத்தாரிடம் பிச்சை கேட்டான். அவரே பிச்சைக்காரர் ஆயிற்றே ! அவர் சிரித்தபடியே "என்னிடம் என்னப்பா இருக்கிறது! மேலைக்கோபுர வாசலில் ஒரு சமுசாரி இருக்கிறான்; அவனைப்போய் கேள்; ஏதாவது கிடைக்கும்" என்றார்: பிச்சைக்காரன் மேலைக் கோபுர வாயில் வந்து பத்ரகிரியாரைப் பிச்சை கேட்டான். "என்னிடம் ஒன்றுமில்லை; நான் ஒரு பரதேசி" என்றார். உடனே பிச்சைக்காரன் "கீழை வாசலிலே இருக்கும் பரதேசி உம்மைச் சமுசாரி என்று சொன்னாரே" என்று சொல்லி விட்டுப் போய்விட்டான்.

அந்த வார்த்தை பத்ரகிரியாரின் உள்ளத்தில் தைத்தது. உடனே தன் ஓட்டை முன்னே கிடந்த நாயின் மீது போட்டு உடைத்தார். ஓடும் உடைந்தது ; நாயும் இறந்து போயிற்று. இறந்த நாய் மறுபடியும் ஓர் அரசனுடைய பெண்ணாகப்பிறந்தது. காருண்யாமிர்த தீர்த்தத்தின் கரையில் நாயடியாள் கோவில்

என்ற சிறிய கோவில் உள்ளது. அது நாயின் சமாதிக் கோவில் போலும் !

இந்தத் தலம் காவிரிக் கரையில் இருக்கின்றது. காவிரிக் கரைக்கும் துறைக்கும் கல்யாண தீர்த்தம் அல்லது பூசத்துறை என்று பெயர். இங்கே உள்ள புஷ்யமண்டபத்தை அச்சுதப்ப நாயக்கருடைய மந்திரியாக இருந்த கோவிந்த தீட்சிதர் கட்டினார்.

தைப் பூசத்தில் இங்குத் திருத்தேர்த் திருவிழா நடைபெறும். இறைவன் பூசத்துறைக்கு எழுந்தருளித் தீர்த்தம் கொடுப்பான்; பல ஊர்களிலிருந்து பக்தர்கள் வருவார்கள்.

இந்தத் தலத்தில் உள்ள பெருமான் மஹாலிங்கம் என்று பெயர் பெற்று இருப்பதால், இதைச் சூழ்ந்த சில தலங்களைப் பரிவார தேவதைகளுக்கு உரிய இடமாகச் சொல்வது வழக்கம்.

| | | |
|---|---|---|
| திருவலஞ்சுழி | — | விநாயகர் தலம் |
| சுவாமிமலை | — | முருகன் தலம் |
| திருவாவடுதுறை | — | நந்திகேசுரர் தலம் |
| சூரியனார்கோவில் | — | சூரிய தலம் |
| சிதம்பரம் | — | நடராஜர் தலம் |
| திருவாப்பாடி | — | சண்டேசர் தலம் |
| ஆலங்குடி | — | தட்சிணாமூர்த்தி தலம் |

இத்தலத்திற்குப் பழைய தல புராணம் ஒன்று உண்டு. கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் மற்றொரு புராணத்தை இயற்றியுள்ளார். பட்டினத்துப்பிள்ளையார் ஒரு மும்மணிக் கோவை பாடியுள்ளார். ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய உலாவும், அநந்தபாரதிகள் பாடிய நொண்டி நாடகமும் இத்தலத்திற்கு இருக்கின்றன.

இந்த ஆலயம் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்தது. அந்த ஆதீனத்தைச் சார்ந்த கட்டளைத் தம்பிரான் ஒருவர் இக்கோவிலில் கட்டளை விசாரணை நடத்தி வருகின்றார். பல லட்ச ரூபாய் செலவில் சமீபத்தில் இக்கோவில் திருப்பணி செய்யப்பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற்றது. கோவிலுக்குள் சிற்பங்கள் நிறைந்த மண்டபங்கள் உள்ளன. சிங்க தீர்த்தம் என்ற கிணறு உள்ளது. நந்தி மிகப்பெரியது. ஒவ்வொரு வருடமும் இக்கோவிலில் "திருமுறைக் கருத்தரங்கு" நடைபெறுகின்றது.

இங்குள்ள பெருமானை மணிவாசகர் "ஆனந்தத்தேன் இருந்த பொந்து" என்று பாடியுள்ளார்.

"அந்த இடைமருதில் ஆனந்தத்தேன் இருந்த
பொந்தைப் பரவி நாம் பூவல்லி கொய்யாமோ"

---

# செய்திகள்

தருமையாதீனத் திருக்கோயில்களில்

## பாவை மாநாடுகள்

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம், தருமையாதீன அருளாட்சிக்குட் பட்ட திருக்கோயில்களில் பாவை மாநாடுகள் கீழ்க்காணுமாறு சிறப்பாக நடைபெற்றன. மாநாட்டின்போது தேவஸ்தான ஓதுவா மூர்த்திகளால் திருவெம்பாவைப் பாடல்கள் பண்ணிசை யுடன் ஓதப்பெற்றன.

திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ் தானத்தில் 29—12—73 சனிக்கிழமையன்றும், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் 30—12—73 ஞாயிற்றுக் கிழமையன்றும் பாவை மாநாடு நடைபெற்றது. திருவெம் பாடல்கள் தேவஸ்தான ஓதுவா மூர்த்திகளால் பண்ணிசை யுடன் ஓதப்பெற்றன. அவ்வமயம் தருமையாதீனத் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் புலவர் திரு. இரா. செல்வக்கணபதி அவர்கள் முறையே "திருவெம்பாவை" மார்கழி நீராடல் என்ற பொருள்களில் சொற்பொழிவாற்றினர். உள்ளூர் சைவ அன்பர்கள் பலரும் திரளாக வந்திருந்து சொற்பொழிவுகளைக் கேட்டுப் பயன் பெற்றனர்.

வேளூர் (வைத்தீஸ்வரன்கோயில்) ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானத்தில் 1—1—74 அன்று நிகழ்ந்த பாவை மாநாட்டில் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர், வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் "திருவெம்பாவை" என்ற பொருளிலும் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிச் சித்தாந்தப் பேராசிரியர், தருமையாதீனப் புலவர், மகாவித்துவான். திரு. சி. அருணை வடிவேல் முதலியார் "திருப்பள்ளியெழுச்சி" என்ற பொருளிலும் விரிவுரையாற்றினர்.

சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் 4—1—74 அன்று நிகழ்ந்த பாவை மாநாட்டில் தருமையாதீனப் புலவர், மகாவித்துவான். திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் (பாவை நோன்பு பற்றியும், மாயூரம் அ. வ. அ. கல்லூரித் தமிழ்

விரிவுரையாளர் செஞ்சொற்கொண்டல் டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன், எம். ஏ., பி. எச். டி., அவர்கள் "பாவையும் - கோவையும்" என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் பாவை மாநாடு 4—1—74 வெள்ளியன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. வித்துவான். திரு. வை. மு. சண்முக தேசிகர் "மார்கழி நீராடல்" பற்றியும் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியை வித்துவான். திருமதி. ப. நீலா "திருப்பள்ளியெழுச்சி" பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள்.

திருக்குவளை ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் 4—1—74 வெள்ளியன்று மாலை வித்துவான். திரு. மு. இரத்தின தேசிகர் "பாவை நோன்பு" என்பது பற்றியும், திருவாரூர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான், திரு. எஸ். எம். சுந்தரராசன் "பாவையும் - கோவையும்" என்பது பற்றியும் திருவெம்பாவைச் சொற்பொழிவாற்றினர்.

விளநகர் ஸ்ரீ துறைகாட்டும் வள்ளலார் சுவாமி தேவஸ்தானத்தில் 4—1—74 அன்று மாலை வித்துவான். சிரோமணி. திரு. வி. சபேசன் அவர்கள் "திருவெம்பாவை" பற்றியும், தருமையாதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான். திரு. வே. கண்ணப்பன் "தைந் நீராடல்" பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத்தியாகராஜ சுவாமி தேவஸ்தானத்தில் 5—1—74 அன்று மாலை நிகழ்ந்த பாவை மாநாட்டில் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர், வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள் "பாவை நோன்பு" பற்றியும் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர், வித்துவான் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள் "பாவையும் - கோவையும்" என்னும் பொருள் பற்றியும் உரையாற்றினர்.

மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவரசுவாமி திருக்கோயிலில் 26—12—73 புதன்கிழமையன்றும், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவர சுவாமி தேவஸ்தானத்தில் 1—1—74 செவ்வாய்க்கிழமையன்றும் திருநின்றியூர் ஸ்ரீ லக்ஷ்மிபுரீசுவர சுவாமி தேவஸ்தானத்தில் 2—1—74 புதன்கிழமை அன்றும், தலைஞாயிறு ஸ்ரீ குற்றம் பொறுத்தீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 3—1—74 வியாழனன்றும் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள் வித்துவான், சிரோமணி. திரு. வி. சபேசன் அவர்களும், வித்துவான், திரு இரா. செல்வக்கணபதி அவர்களும் திருவெம்பாவைச் சொற்பொழிவாற்றினர். ஆங்காங்கும் அன்பர்கள் பலர் திருவெம்பாவைச் சொற்பொழிவுகளைக்கேட்டுப் பயன்பெற்றனர்.

## சென்னை, தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப்பிரசார நிலையத்தில் பாவைமாநாடு

சென்னை, தருமையாதீனச் சமயப் பிரசார நிலையத்தில் 1—1—74 அன்றுமுதல் 3—1—74 வரை மூன்று நாட்கள் பாவை மாநாடு சிறப்புற நிகழ்வுற்றது.

முதல்நாள் நிகழ்ச்சி (1—1—74) அன்று சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி கனம். திரு. N. கிருஷ்ணசாமிரெட்டியார் B. A., B. L., அவர்கள் தலைமையில் திரு. என். ஆர். முருகவேள் M. A., M. O. L. அவர்களும் Dr C. பாலசுப்பிரமணியம் M. A., M. Litt. Phd அவர்களும் உரையாற்றினர். அடுத்து குமாரி R. கௌரி குழுவினரால் 'மாணிக்கவாசகர்' பற்றி இன்னிசைச் சொற்பொழிவு நிகழ்த்தப் பெற்றது.

இரண்டாம் நாள் (2—1—74) அன்று நகர சிவில் கோர்ட் நீதிபதி திரு. மாணிக்கம் அவர்கள் தலைமை தாங்கினர். புலவர் திரு. A. J. இராமசுவாமி முதலியார் அவர்களும் திரு. தெ. ஞான சுந்தரம் M. A., அவர்களும் சொற்பெருக்காற்றினர். மழலை அமுதச்செல்வி R. மாலினி 'ஆண்டாள் திருமணம்' பற்றி உரை யாற்றினர்.

மூன்றும் நாள் (3—1—74) அன்று திரு. N. பழநியப்பன் B. A., B. L., அவர்கள் தலைமையுரைக்குப்பின்னர் புலவர் திரு. இமய வரம்பன் அவர்களும் திருவாசகமணி திரு. கே. எம். பாலசுப்பிர மணியம் B. A., B. L., அவர்களும் சொற்பெருக்காற்றினர்.

சென்னை நகரப் பெருமக்கள் பலர் வந்திருந்து சொற் பொழிவுகளைக் கேட்டுப் பயன்பல பெற்றனர்.

## சென்னை சமயப் பிரசார நிலையம் 20-ஆவது ஆண்டு நிறைவு விழா

சென்னை, தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையம் வேளூர் தேவஸ்தான இறைபணி மன்றத்தின் 20- ஆவது ஆண்டுநிறைவு விழா31—12—73 அன்று மாலை தமிழ்நாடு உயர்நீதிமன்ற நீதிபதி கனம். திரு. S. நடராஜன் B. A., B. L., அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நிகழ்வுற்றது. Dr திரு. B. நடராஜன் M. A., D Lit அவர்களும் பேராசிரியர் திரு.ஔவை து.நடராசன் M. A., M. Lit அவர்களும் உரையாற்றினர். தருமபுரம் திரு. P. சுவாமிநாதன் அவர்கள் தேவார இன்னிசை நிகழ்த்தினர். அன்பர்கள் பலர் திரளாக வந்து கலந்துகொண்டு பயன் பெற்றனர். வித்து வான் ஸ்ரீமத் மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரை

நன்றியுரை முதலியன கூறி கூட்டத்தை இனிதே நிகழ்த்து வித்தார்கள்.

மதுரை ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில்

## சிவஞானபோத மாபாடியத் தொடர்விரிவுரைத் தொடக்கவிழா

மதுரைஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில் சிவஞான போத மாபாடியத் தொடர் விரிவுரை வகுப்பை மதுரை மாநகராட்சி மன்றத் துணைமேயர் திரு. எம். ஆர். சங்கரன் அவர்கள் தலைமையில் தேவகோட்டை சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள்(பாலகவி. வயிநாகரம் இராமநாதன் செட்டியார்) 16—12—73 மாலை 7 மணியளவில் தொடங்கி வைத்தார்கள். திரு மடத்து மாணாக்கர்கள் திருமுறைப் பாராயணம் செய்தனர். தியாகராசர் கல்லூரித் துணைத் தமிழ்ப்பேராசிரியர் திரு. அ' சங்கரநாராயணன் அவர்கள் தொடர்விரிவுரை வகுப்பை நடத்தி னார்கள். குருவாரந்தோறும் தொடர் விரிவுரை வகுப்பு நடை பெறும் என்று அறிவித்து வித்துவான். திரு. தா. குருசாமி அவர்கள் நன்றி கூறினர். திரளான அன்பர்கள் வந்திருந்து சிறப்பித்தனர்.

குத்தாலம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்வாரவழிபாட்டுக்கழகம் உத்தாலவிருட்சச் சிறப்பு வழிபாடு

தருமையாதீனத்திற்குச் சொந்தமான குத்தாலம் ஸ்ரீ உக்த வேதீஸ்வரர் ஆலயத்தில் 14—12—73 வெள்ளியன்று 44 ஆவது வாரவழிபாடு உத்தால விருட்சச் சிறப்பு வழிபாடாக நடை பெற்றது. உத்தால விருட்சத்திற்கும், இறைவனின் பாதச் சுவட்டிற்கும், ஸ்ரீ அம்பிகைக்கும் சிறப்பான அபிஷேக ஆராதனை கள் நடைபெற்றன.

குத்தாலம் ஸ்ரீ R சுந்தரேச சிவாசாரியார் அவர்கள் குத்தாலம் எனவழங்கும் திருத்துருத்தித் தலவரலாற்றை விளக்கிக்கூறி உத்தாலம் என்பது மருவிக் குத்தாலம் என வழங்கு கிறது என விளக்கினர். கழகச் செயலர் திரு. கோவிந்தராசலு கொட்டும் மழையிலும் கூடியிருந்து வழிபாடு செய்த வழிபாட்டுக் கழக அன்பர்களைப் பாராட்டி நன்றி கூறிய பின்னர் பிரசாதம் வழங்கப்பட்டது; அன்பர்கள் பெற்றுப் பயனடைந்தனர்.

# எதிர்காலம்

ஜோதிஷார்ணவம்

## திரு. K. முத்துஜோதிடர்

( பிரமாதீசஹு தைமீ 1உ முதல் 30உ முடிய )

( 14—1—74 முதல் 12—2—74 முடிய )

ஸ்ரீ லோகரக்ஷகரான ஸ்ரீ சூரியபகவான் உலக க்ஷேமத்தின் பொருட்டு, நாளது வருஷம் தை மாதம் முதல் தேதி சோமவாரம் ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 3, வினடி 21-க்கு மகர லக்கினத்திலேயே மகர சங்கிரமணப் பிரவேசம் செய்கிறார். அதன் பலன் உலகெங்கும் சுபிக்ஷமும், தனதான்யாதி நவதான்ய விருத்திகளும், பிரஜைகளும், தேவாலயங்கள், மடாலயங்கள், தர்மஸ்தாபனங்களும், சாதுக்களும், சிவகேசவ பக்தர்களும் மனம் சாந்தமடைதலும், பயநிவாரணமும், புண்ணிய பூமிகளிலும், தக்ஷிண பாரதத்திலும் விசேஷ தான்ய விருத்திகளும், தக்ஷிண பூமியே நெல்களஞ்சியமாய்ப் பிரகாசித்து உலகம் முழுவதிற்கும் அன்னமளித்து சந்தோஷத்தைத் தருதலும் ஏற்படும். பிரவேசகால முகூர்த்தம்; பிராதக்கால முகூர்த்தத்தில் ஸ்ரீ சூரியபகவான் உலகெங்கும் பொங்கல் பண்டிகை கொண்டாட்டத்தில் பிரத்தியக்ஷதரிசனம் தந்து நித்யோத்சவத்தையும், தர்மிஷ்டர்களுக்கு விசேஷ தர்ம பலன்களையும், சாசுவதமாய்த் தந்து குருமார்களையும், பெரியோர்களையும் சந்தோஷமடையச் செய்வார்; உலகம் செழிக்கும். சுபமுண்டாகும்.

### 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும், பூர்ணமாக சுப பலனைத்தரும். ஜீவனம் விருத்தியாகும். குடும்பம் தழைக்கும். மேலோர் பெரியோர்களின் அன்பு கிடைக்கும். ஆரோக்யம் உண்டுபண்ணும். லாபம் ஏற்படும். எந்தக் காரியங்களும், நன்மையாகவே நடக்கும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அதிகமான உழைப்பும் அலைச்சலும் ஏற்படும். செலவினங்கள் அதிகமாக இருக்கும். எதிர்பார்த்த காரியங்கள் தவக்கத்தோடு நடக்கும். புதன், வியாழன் சுபமாகும்.

3. மிதுனம்–மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் சுபமிருக்காது. எதிர்பாராத நஷ்டங்கள் ஏற்படும். குடும்பத்தொல்லைகள் அதிகமாகும். வைத்திய செலவுகள் ஏற்படும். நினைத்த காரியங்கள் நினைத்த படி நடக்காது. வெள்ளி, சனி சுபமாகும்.

4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்

கடகராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். உத்தியோகத்தில் இடம்மாறி லாபம் உண்டாகும். மனம் சாந்தி அடையும். மேலோர் பெரியோர்களால் நன்மை உண்டாகும். எங்கும் கீர்த்தி உண்டாகும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼

சிம்மராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தனதான்ய விருத்தி ஏற்படும். குடும்ப சுகம் எற்படும். ஜீவனம் ஓங்கும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நடந்துகொண்டு இருக்கும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். செவ்வாய், புதன் சுபமாகும்.

6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

கன்னியாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். அதிகமான உழைப்பும் ஜீவன விருத்தியும், உலகத்தில் பிரசித்தியும் ஏற்படும். இல்லற சுகம் ஒங்கும். ஆரோக்யம் உண்டுபண்ணும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

7. துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

துலாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். ஆரோக்யம் உண்டுபண்ணும். ஜீவனம் விருத்தியாகும். தெய்வபக்தியும் தெய்வீகமான காரியங்களும் ஏற்படும். சகலமான கரியங்களும் சாதிக்க முடியும். சனி, ஞாயிறு சுபமாகும்.

8. விருச்சிகம் - விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் சுபமிருக்காது. அதிகமான அலைச்சல்களும் மனதிற்கு கவலையும் உண்டுபண்ணும். செல வினங்கள் அதிகமாகும். மனம் நிம்மதி இருக்காது. திங்கள் செவ்வாய் சுபமாகும்.

9. தனுசு - மூலம் – பூராடம் – உத்திராடம் ¼

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும், வரவு செலவு சமமாகும். நினைத்த காரியங்கள் தவக்கத்தோடு நடக்கும். அதிகமான உழைப்பும், அலைச்சல்களும் ஏற்படும். புதன் வியாழன் சுபமாகும்.

10. மகரம்–உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½

மகரராசி 9 பாதங்களும், சுபமான பலனைத்தரும். ஜீவனம் ஓங்கும். தனதான்யம் விருத்தியாகும். மேலோர் பெரியோர்களால் நன்மை உண்டாகும். உலகத்தில் பிரசித்தி ஏற்படும். வெள்ளி, சனி சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் ½-சதயம் –பூரட்டாதி–¾

கும்பராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். இடம் மாறல் ஏற்படும். வரவு செலவு சமமாக இருக்கும். எதிர்பார்த்த காரியங்கள் தவக்கத்தோடு நடக்கும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். ஜீவனம் ஓங்கும். குடும்ப சுகம் அதிகமாகும். எதிர்பாராத சில நன்மைகள் உண்டாகும். தெய்வ பலத்தாலும், மேலோர் பெரியோர்களுடைய அன்பினாலும் சகலமும் சாதிக்க முடியும். சுபம் உண்டாகும்.

---

EXTRACT FROM THE VISITOR'S BOOK

Dharmapuram Adhinam

Sri Panchanatheeswaraswamy Devasthanam, Thiruvaiyaru.

Had a must interesting and bakthi inspiring time in this holy place on the bank of River Kaveri.

26—11—73 (Sd.) G. S. Ramnath,
Commissioner of Income Tax, Madras.

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்" திங்கள் இதழ்

## சந்தாதாரர்களுக்கு ஓர் அறிவிப்பு.

"ஞானசம்பந்தம்" திங்களிதழ் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க, தக்க வகையில் பணி ஆற்றி வருவதைத் தமிழ்மக்கள் நன்கு அறிவர். ஞானசம்பந்தத்திற்கு முப்பத்திரண்டு ஆண்டு நிறைவுபெற்று முப்பத்துமூன்ருமாண்டு நடை பெற்று வருகிறது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிருேம்.

காகிதவிலை உயர்வு முதலிய சில இன்றியமையாத காரணங்களால் சந்தாத்தொகை சிறிது உயர்த்தப் பெற்றுள்ளது. ஞானசம்பந்தம் சந்தாதாரர்கள் வழக்கம்போல் சந்தா செலுத்தி ஞானசம்பந்தம் பெற்று நலமடைய வேண்டுகிருேம்.

இன்றுவரை சந்தா அனுப்பாதவர்கள் தனி அறிவிப்பை எதிர்பாராமல் உடன் சந்தா செலுத்த வேண்டுகிருேம்.

| | | | |
|---|---|---|---|
| ஆயுள் சந்தா | .... .... | ரூ. | 100—00 |
| ஆண்டுச் சந்தா (உள்நாடு) | | ரூ. | 5—00 |
| ,, (வெளிநாடு) | | ரூ. | 7—00 |
| தனி இதழ் | .... .... | பைசா. | 0—50 |

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி:-

செயலாளர்,
ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மாயூரம் P. O.
தஞ்சை மாவட்டம்.

# தை மாதச் சிறப்பு நாட்கள்

14—1—74 உத்தராயண புண்ணியகாலம்; பொங்கல்பண்டிகை திருவையாறு தீர்த்தவாரி. திருக்கடவூர் ஸ்ரீ கால சம்காரமூர்த்தி அபிஷேகம்; சீகாழி ஸ்ரீ உமாமகேசுவரர் புழுகாப்பு.

15—1—74 மாட்டுப்பொங்கல்; கோபூசை. வைத்தீசுவரன்கோயிலில் உண்டியல் வைத்தல். ஸ்ரீ முத்துக்குமாரசுவாமிக்கும், ஸ்ரீ ஆறுமுகப்பெருமானுக்கும் சண்முகார்ச்சனை. இவ்வாறு பிரதி செவ்வாயும் நடைபெறும்.

17—1—74 ஸ்ரீ நீலகண்டநாயனார் குருபூஜை.

18—1—74 விளநகர் ஸ்ரீ துறைகாட்டும்வள்ளலார் சம்வத்சராபிஷேகம். தருமபுரம் ஸ்ரீமகாலக்ஷ்மி துர்க்காதேவிக்கு ஏகதின லக்ஷார்ச்சனை. வைத்தீசுவரன்கோயில், சீகாழி, திருக்கடவூர் முதலான இடங்களில் ஸ்ரீ அம்பிகைக்கு நவசத்தி அர்ச்சனை. இவ்வாறு பிரதி வெள்ளிக்கிழமைகளிலும் நடைபெறும்.

20—1—74 மகாப்பிரதோஷம்.

22—1—74 போதாயன அமாவாசை.

23—1—74 சர்வ அமாவாசை. சீகாழியில் ஸ்ரீ திருஞான சம்பந்தர் அபிஷேகம்,

25—1—74 வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ கற்பகவிநாயகர் தைச் சுக்கிரவார உற்சவம் ஆரம்பம்;

26—1—74 ஸ்ரீ அப்பூதி அடிகள் நாயனார் குருபூசை. குடியரசு தினம்

28—1—74 திருவிடைமருதூர், பழனி, சுவாமிமலை முதலான இடங்களில் புஷ்ய உற்சவ ஆரம்பம். குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவரர் சம்வத்சராபிஷேகம்,

29—1—74 ஸ்ரீ கலிக்காம நாயனார் குருபூசை.

30—1—74 ரதசப்தமி புண்யகாலம். திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ ஆதி நமச்சிவாயமூர்த்திகள் குருபூஜை.

1—2—74 வேளூர் கார்த்திகை.

3—2—74 வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்கு கடைச் செவ்வாய் உற்சவ ஆரம்பம். ஸ்ரீ கண்ணப்ப நாயனார் குருபூசை. தருமபுரம் ஸ்ரீ மகாலட்சுமி துர்க்காதேவி சம்வத்சராபிஷேகம்,

4—2—74 மகாப்பிரதோஷம். ஸ்ரீ அரிவாட்டாய நாயனார் குருபூசை. ஸ்ரீ திலகவதியார் குருபூசை.

5—2—74 தருமபுரம் ஸ்ரீவனதுர்க்காதேவி சம்வத்சராபிஷேகம்.

6—2—74 பௌர்ணமி மாத பூஜையில் தேன் அபிஷேகம். திருவிடைமருதூர், திருவையாறு முதலான இடங்களில் புஷ்ய தீர்த்தவாரி.

9—2—74 ஸ்ரீ சண்டேசுர நாயனார் குருபூசை.

10—2—74 சங்கடஹரசதுர்த்தி. ஆலவேலி ஸ்ரீ சித்திவிநாயகர் சம்வத்சராபிஷேகம்.

11—2—74 பேரளம் ஸ்ரீசுயம்புநாதசுவாமி சம்வத்சராபிஷேகம்.

12—2—74 வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்கு கடைச் செவ்வாய் உற்சவம் பூர்த்தி. திருக்கடவூர் ஸ்ரீ முனிசுவரன் பூசை. தருமையாதீனம் 15 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணிதேசிகர் குருபூசை.

## தருமையாதீனம், தமிழ்க் கல்லூரி மாணவருக்கு
## ஆயிரம் ரூபாய் பரிசு

தருமையாதீனத் தமிழ்க் கல்லூரி மாணவர், தமிழ்ப் புலவர் தேர்வில் மாநிலத்திலேயே முதலாவதாகத் தேறி ஆயிரம் ரூபாய் பரிசு பெற இருக்கிறார்.

தமிழகத்தில் உள்ள தமிழ்க் கல்லூரிகளில் பயிலும் மாணவர்களில் சென்னைப் பல்கலைக்கழகம் நிகழ்த்தும் புலவர் நிறைநிலைத் தேர்வில் முதல் வகுப்பில் முதலாவதாகத் தேர்ச்சிபெறும் மாணவருக்குத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள், ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்நினைவாக நிறுவிய அறக்கட்டளையின் மூலம் ஆண்டுதோறும் ஆயிரம் ரூபாய் பரிசு அளிக்கப்பெற்று வருகிறது.

கடந்த 1973 மார்ச்சு மாதத்தில் நடைபெற்ற மேற் குறித்த தேர்வில் தருமையாதீனத் தமிழ்க் கல்லூரி மாணவர் து. தங்கராசு மாநிலத்தில்முதலாவதாகத்தேர்ச்சி பெற்று ஆயிரம் ரூபாய் பரிசு பெற இருக்கிறார்.

இத்துடன் பவானந்தம்பிள்ளை நினைவுப் பரிசு ரூபாய் நூறும் இம் மாணவருக்கு அளிக்கப்பெறுகிறது.

சென்னைப் பல்கலைக் கழகப் புலவர் தேர்வில் கடந்த ஆண்டில் முதல் வகுப்பில் தேர்ச்சியுற்ற மூன்று மாணவர் களில் இருவர் தருமையாதீனத் தமிழ்க் கல்லூரியைச் சார்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. கடந்த 27 ஆண்டுகளில் இக்கல்லூரியில் 515 மாணவ - மாணவியர் புலவர் பட்டம் பெற்றுள்ளனர். அவர்களில் ஐந்து பேர் இதுவரை ஆயிரம் ரூபாய் பரிசு பெற்றுள்ளனர்.

Printed&Published by, A. Kalyanasundara Derikar, Superintendent Dharmapuram Adhi[nam]
at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—1—74.